# சட்டநாதர் சன்னதியில் பட்டாதார்கள்

ஜெயமணி

இலக்கிய நிபுணரும் அரசியல் பிரமுகருமான காலஞ்சென்ற ஸி. ஆர். ரெட்டிக்கு ஒரு சமயம் ஜஸ்டிஸ் கட்சியின்மீது கோபம் வந்தது. அந்தக் கோபத்தை அவர் கும்பகோணத்தின்மீது காட்டினார். "ஜஸ்டிஸ் கட்சியினர் முன்பு புதுக்கோட்டையில் கும்பகோணம் செய்தார்கள்; இப்போது கோயம்புத்தூரில் கும்பகோணம் செய்திருக்கிறார்கள்; இனி எந்த இடத்தில் கும்பகோணம் செய்யப் போகிறார்களோ!" என்று ஸி. ஆர். ரெட்டி குறிப்பிட்டார். ஆனால் இது ஜஸ்டிஸ் கட்சியைப் பாதித்ததோ என்னமோ, தெரியாது; கும்பகோணத்தினருக்கு மிகுந்த கோபத்தை உண்டாக்கிற்று.

தற்போது வேறொரு விதத்தில் 'மன்னார்குடி'க்குப் பிரசித்தி ஏற்பட்டு வருகிறது. தஞ்சாவூர் ஜில்லாவில் ஒரு கூட்டத்தார் "ஜாக்கிரதை! இங்கேயும் மன்னார்குடி செய்து விடுவோம்!" என்று பயமுறுத்தி வருகிறார்களாம்!

மன்னார்குடியில் யார் எப்பொழுது என்ன செய்தார்கள் என்பதை வாசக நேயர்களுக்கு ஞாபகமூட்ட விரும்புகிறேன்.

நாலு ஐந்து வருஷங்களுக்கு முன் அங்கு கிஸான் கிளர்ச்சியின் பெயரால், கொலை, கொள்ளைகளில் சிலர் ஈடுபட்டார்கள். களங்களிலும் வைக்கோற் போர்களிலும் தீ வைக்கும் கைங்கரியங்களும் நடைபெற்றன. சர்தார் வேதரத்னம் போன்ற தேச பக்தர்களின் உயிருக்கே ஆபத்து வந்தது என்றால், அக் கூட்டத்தினரின் திருவிளையாடல்களைப் பற்றி அதிகமாக எதுவும் கூறவேண்டியதில்லை. அவர்களுடைய அட்டகாசம் காரணமாகப் பல மாதங்கள் வரையில் அங்கு ரிசர்வ் போலீசார் முகாம் போடும்படி நேர்ந்தது.

அதிலிருந்து அவர்கள் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த பல இடங்களுக்கும் சென்று, "நாங்கள் சொல்லுகிறபடி நிலச் சொந்தக்காரர்கள் நடந்து கொள்ளாவிட்டால் இந்த இடத்திலும், 'மன்னார்குடி' செய்து விடுவோம்" என்று மிரட்டி வருகிறார்களாம்.

அவர்களுடைய மிரட்டலைக் கண்டு இது வரையில் சில மிராசதார்கள் பயந்து கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர் "நடப்பது நடக்கட்டும்" என்று துணிந்திருந்தார்கள். ஆனால் தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள இதுவரை நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை.

தற்கால உலகத்தில் ஆண்டி முதல் அரசன் வரையில் சகலரும் கட்டுக்கோப்பாக நின்று தங்கள் தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்காகச் சங்கங்கள் அமைத்துக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா!

மில் தொழிலாளர்களுக்குச் சங்கம் இருக்கிறது. விவசாயத் தொழிலாளர்களுக்குச் சங்கம் இருக்கிறது. மற்றும் வர்த்தகர்கள், மில் முதலாளிகள் முதலிய செல்வவந்தர்களும் தங்கள் தங்களுக்கென்று சங்கம் அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஏன், இந்தியா சுதந்திரம் பெறும் வரையில் இந்திய மன்னர்கள் கூடத் தங்களுடைய ஏதேச்சாதிகார உரிமைகளுக்கு ஆபத்து எதுவும் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதற்காக ஒரு சங்கத்தை அமைத்துக் கொண்டிருந்தார்கள்!

ஆனால் தஞ்சை மிராசதார்கள் மாத்திரம், "வருஷா வருஷம் பூமி தேவி தானியச் செல்வத்தை நமக்கு அள்ளிக் கொடுக்கிறாள். நாம் வேறு யாருடைய தயவையும் நாடவில்லை. அப்படியிருக்க நம் தலையில் யார் கை வைக்கப் போகிறார்கள்!" என்று பேசாமல் இருந்து விட்டார்கள்.

எனினும் இப்போது அவர்கள் தங்கள் தவறை உணர்ந்து, மேற்கொண்டு தங்களுக்குக் கஷ்டநஷ்டங்கள் ஏற்படாமல் இருப்பதற்கான முறைகளைக் கைக்கொள்ள முற்பட்டிருக்கிறார்கள். தங்களுக்குள் சங்கம் அமைத்துக் கொண்டு, யாரும் 'மன்னார்குடி' செய்ய முடியாமல் தடுக்க முனைந்திருக்கிறார்கள்.

இதற்குப் பூர்வாங்கமாக, சீகாழி, மாயவரம் தாலூகாக்களின் ரயத்துகள் மகாநாடு சென்ற வாரம் சீகாழி நகரில் நடந்தது.

பட்டாதார்கள் மகாநாட்டின் ஒரு பகுதி



பட்டாதார்கள் தங்களுடைய முதல் மகாநாட்டுக்குச் சீகாழியைத் தேர்ந்தெடுத்தது மிகவும் பொருத்தமானதுதான். அந்தப் புனித க்ஷேத்திரம் ஞானசம்பந்தரின் அழுகைக் குரலைக் கேட்டு உமையொரு பாகனுர் அருள் புரிந்த இடம் அல்லவா! எனவே, அந்த ஸ்தலத்தில் கூடினுல் தங்களுடைய தீனக்குரல் சர்க்கார் செவிகளில் விழுமாறு கடவுள் கிருபை செய்யலாம் என்று பட்டாதார்கள் நினைத்திருக்கக் கூடும்.

அங்கு கூடியவர்கள் தங்களை பிராகுதார்கள் என்று சொல்லிக்கொள்ள விரும்பவில்லை. பிராகுதார் என்றுல் ஜமீன்தார்களுக்கு அடுத்தபடியாக ஏராளமான நிலபுலன்கள் வைத்துக் கொண்டு சுகவாழ்க்கை நடத்துகிறவர்கள் என்ற தப்பெண்ணம் நிலவி வருகிறது அல்லவா! ஆனுல் தஞ்சை ஜில்லாவில் உள்ள பிராகுதார்களில் தொண்ணூறு சத விகிதத்தினருக்கு ஐந்து ஏக்கர் கூட நிலம் கிடையாது. அவர்கள் ஐம்பது ரூபாய்க்குக் குறைவாகவே நிலவரி செலுத்துகிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் தங்கள் நிலங்களைத் தாங்களே உழுது பயிரிடுகிறுர்கள்.

எனவே மேற்படி மகாநாட்டுக்கு 'ரயத்துக்கள் மகாநாடு' என்று பெயர் கொடுத்து, பட்டாதார்களுக்கு அழைப்பு அனுப்பி யிருந்தார்கள். சற்றேறக் குறைய இரண்டாயிரம் பட்டாதார்கள் விஜயம் செய்திருந்தார்கள். கடுமையான வெய்யிலைக்கூட லட்சியம் செய்யாமல் பதினைந்து, இருபது மைல் தூரத்திலிருந்து நடந்தும் மாட்டு வண்டியிலும் நூற்றுக் கணக்கான ரயத்துகள் மகாநாட்டுக்கு வந்திருந்தனர்.

"தஞ்சைப் பட்டாதார்கள் என்றுல் நெல்லிக்காய் மூட்டை என்பது பிரசித்தமான விஷயம். அவர்களுக்குள் ஒற்றுமை இருந்திருந்தால் இவ்வளவு அராஜகமான காரியங்கள் நடந்திருக்குமா! 'இசான் தகராறு என்றுல் பெரிய பிராகுதார்களுக்குத் தான்; நமக்கு என்ன அதைப் பற்றிக் கவலை' என்று சொல்லிக் கொண்டிருந்த சிறிய பட்டாதார்கள் பாடும் இப்போது திண்டாட்டமாகி விட்டது. அவர்களின் தலையிலும் தோழர்கள் கைவைக்க ஆரம்பித்து விட்டார்கள். அதனுல் தான் வெய்யிலையும் பாராமல் இத்தனை பேர் மகாநாட்டுக்கு ஓடிவந்திருக்கிறுர்கள்" என்றுர் என் அருகில் இருந்த ஒரு பட்டாதார்.

மாயவரம் ஸ்ரீ கே. கோவிந்தராஜுலு நாயுடு பி. ஏ. பி. எல். மேற்படி மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார்.

ஸ்ரீ டி. என். துரைசாமி ஐயர் தேசியக் கொடியை ஏற்றி வைத்த பின், பட்டாதார்களை வரவேற்று ஸ்ரீ எஸ். முருகேச முதலியார் பி. ஏ., பி. எல். பேசினுர். பட்டாதார்களை எதிர்நோக்கி நிற்கும் ஆபத்தை அவர் படம் பிடித்துக் காட்டினுர்.

"தஞ்சை ஜில்லாவில் உள்ள பட்டாதார்கள் ஒரு கூட்டத்தினரால் தங்களுக்கு இழைக்கப்பட்டு வரும் கஷ்ட நஷ்டங்களைச் சமாளிக்க வேண்டுமாயின், அவர்களிடையே ஒற்றுமை வேண்டும். ஒத்துழைப்பு வேண்டும், உறுதி வேண்டும். . பயம் வேண்டாம். நாம் எல்லோரும் சங்கமாகச் சேர்ந்து கட்டுக் கோப்பான முறையில் நமது குறைகளைச் சர்க்காரிடம் தெரிவித்துக் கொண்டால்தான் நமக்குப் பரிகாரம் ஏற்படும். இந்த ஜில்லாவில் உள்ள ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு தாலுக்காவிலும் ரயத்துக்கள் சங்கம் அமைக்கப்பட வேண்டும். மேற்படி சங்கங்கள் ஜில்லா சங்கத்துடன் இணைக்கப்பட வேண்டும்" என்று மகாநாட்டை ஆரம்பித்து வைத்த குன்னம் ஸ்ரீ எஸ். ராமமூர்த்தி ஐயர் மகாநாட்டின் நோக்கத்தை விளக்கினுர்.

"நாம் தொழிலாளர்களுக்கு எவ்வளவு வேண்டுமாயினும் கொடுக்கத் தயாராக இருக்கிறேம். ஆனுல் அவர்கள் பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியல் கட்சியுடன் தொடர்பு வைத்துக்கொண்டு நம்மை மிரட்டக் கூடாது. ஏழைகளுக்கு உதவி செய்வதற்காகப் பெரிய பட்டாதார்களுக்குச் சர்க்கார் அதிக வரி விதிப்பதை நாங்கள் ஆட்சேபிக்க வில்லை" என்றும் ஸ்ரீ ராமமூர்த்தி ஐயர் குறிப்பிட்டார்.

"நம் வீட்டுக்கு அருகில் நெருப்பு வந்திருக்கிறது. அது தஞ்சை ஜில்லா நெல் களஞ்சியத்தைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது. அந்த நெருப்பு தானுக அணைந்து விடும் என்று நம்மில் பலர் கனவு கண்டு வருகிறேம். அது பெரிய தவறு" என்ற எச்சரிக்கையுடன் ஸ்ரீ கோவிந்த ராஜுலு நாயுடு தலைமைப் பிரசங்கத்தை ஆரம்பித்தார்.

"பட்டாதார்களுக்குள் ஒற்றுமை இராததினுலேயே தஞ்சை ஜில்லாவில் காங்கிரஸ் கட்சி தோல்வி அடைய நேர்ந்தது. எல்லையற்ற தியாகம் செய்து பாரத நாட்டுக்குச் சுதந்திரத்தை வாங்கிக் கொடுத்த காங்கிரஸ் இங்கு சிலருடைய சூழ்ச்சியினுல் தோல்வியுற நேர்ந்தது தஞ்சை ஜில்லா

மகாநாட்டின் மற்ெருரு தோற்றம்





ஸ்ரீ கே. கோவிந்தராஜுலு நாயுடு தலைமை வகிக்க, ஸ்ரீ எஸ். ராமமூர்த்தி ஐயர் மகாநாட்டை ஆரம்பித்து வைத்துப் பேசுகிறார்.

வுக்கே அவமானம் ஆகும்'' என்று மகாநாட்டுத் தலைவர் பொதுத் தேர்தல் முடிவைக் குறித்துத் தமது ஏமாற்றத்தைத் தெரிவித்தார்.

மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்த பட்டாதார்களைத் தலைவர் அத்துடன் விடவில்லை. தேக உழைப்பைக் கௌரவக் குறைவாகக் கருதும் பட்டாதார்களுக்குச் சில அரிய யோசனைகளை எடுத்துக் கூறினார். மற்றத் தொழிலாளர்களுக்குச் சமமாக அவர்களும் கலப்பையைப் பிடிக்க வேண்டும், கச்சம் கட்டிக் கொண்டு களத்தில் இறங்க வேண்டும் என்றார். அதற்கு உதாரணமாகத் தலைவர் மகேந்திர பள்ளி கிராமத்தில் நடந்த சம்பவத்தை உற்சாகத்துடன் எடுத்துக் காட்டினார்.

சில மாதங்களுக்கு முன் மேற்படி கிராமத்தில் கிசான் தகராறு ஏற்பட்டது. உடனே அந்தக் கிராமத்தில் உள்ள பட்டாதார்களான ஆடவர்களும் பெண்களும் வயல்களில் இறங்கித் தாங்களே கலப்பை பிடித்து உழுவதற்கு ஆரம்பித்து விட்டார்கள். அவர்கள் அவ்விதம் செய்தது ஆச்சரியகரமான பலனைக் கொடுத்தது. நிலங்கள் ஒன்றுக்கு ஒன்றரையாக விளைந்தன. கிசான்களும் மேற்கொண்டு தகராறு செய்யாமல் வேலைக்குத் திரும்பி வந்து விட்டார்கள். கிசான் தகராறுகளையும் கம்யூனிஸ்டுப் பிரசாரங்களையும் தடுக்க அந்தக் கிராமவாசிகளின் முன்னுதாரணத்தைப் பின் பற்ற வேண்டும் என்பதை மகாநாட்டுத் தலைவர் கட்டிக் காட்டினார்.

நிலங்களை எல்லாருக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும் என்று கூறுவோருக்குத் தலைவர் சில புள்ளி விவரங்களை எடுத்துக் கூறினார். அவ்வாறு பங்கிட்டுக் கொடுத்தால் தலைக்கு மூன்றில் ஒரு ஏக்கர்தான் கிடைக்கும் என்றும், சமூதாய அபிட்சத்தில் சிரத்தை கொண்ட எவரும் அத்தகைய பங்கீட்டை ஆதரிக்க மாட்டார்கள் என்றும் குறிப்பிட்டார்.

மகாநாட்டில் பல தீர்மானங்கள் கரகோஷத்தினிடையே ஏகமனதாக நிறைவேறின.

உணவு கண்ட்ரோலை ஒழித்ததற்காகப் பட்டாதார்கள் ராஜாஜி சர்க்காரைப் பாராட்டினர். தாங்கள் நெல்லை அதிக விலைக்கு விற்பதில்லை என்று உறுதி கூறினர்.

தற்போது தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த பல கிராமங்களில் பலாத்காரங்களும் வேலை நிறுத்தங்களும் தாண்டவமாடுகின்றன; தழை எருக்கள் திருட்டுப் போகின்றன; நிலச் சொந்தக்காரர்கள் மிரட்டப் படுகிறார்கள்; தடியெடுத்தவர்கள் பிறருடைய வயல்களில் அறுவடை செய்வது சகஜமாக இருக்கிறது. இத்தகைய காரியங்கள் நடைபெறாமல் தடுக்கச் சர்க்கார் தாமதமின்றித் தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்.

''ஏற்கெனவே நிலவரிப் பளுவினால் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கும் பட்டாதார்களுக்கு உபரி வரி விதிக்கும் யோசனையைக் கைவிட்டுவிட வேண்டும்'' என்பதும் தீர்மானங்களில் ஒன்று.

ஜனநாயக தர்மமே உருவெடுத்த ராஜாஜி மந்திரி சபையிடம் பட்டாதார்களுக்கு உள்ள பூர்ண நம்பிக்கையைத் தெரிவித்தனர். முதன் மந்திரி ராஜாஜியைப் பேட்டி கண்டு தங்களுடைய துன்பங்களுக்குப் பரிகாரம் தேடுவதென்ற தீர்மானத்துடன் மகாநாடு முடிவடைந்தது.

''ஏன் அப்பா, நீ பஸ் கண்டக்டர் வேலை கேட்கிறாயே! உனக்கு அந்த வேலைக்கு வேண்டிய அநுபவம் என்ன இருக்கிறது?''

''அநுபவம் ஒன்றும் கிடையாதுங்க! ஆனால், நன்றாய்ச் சீட்டி யடிப்பேனுங்க!''



எப்பொழுதும், எங்கும்



*கைகளில்* அழுக்கிலிருக்கும் கிருமிகள் பற்றிக்கொள்ளலாம்



அவைகளை உங்கள் *உடலிலும்* பரவச்செய்யலாம்

— *இந்த ஆபத்தை தவிர்க்க*—

*கைகளையும் உடலையும்* தவறாமல்

# லைப்பாய் சோப்பினால்

கழுவுங்கள்.

*அது அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களை காப்பாற்றுகிறது.*




L. 224-50 TM




# பாதி விலை

ஸ்விட்ஜர்லாந்திலிருந்து ஏராளமாகத் தருவிக்கப்பட்ட கடிகாரங்களில் பாதிக்குமேல் விற்பனையாகி விட்டன. இப் பாதி விலை சலுகை இன்னும் இரண்டு வாரங்களுக்கு மேல் நீடிக்கப்பட மாட்டாது. ஒவ்வொரு 15, 17 ஜுவல் கடிகாரமும் 3 வருஷமும் மற்றவை ஒரு வருஷமும் உத்தரவாதம் கொண்டவை. ஒவ்வொரு கடிகாரத்துடனும், ஒரு காரண்டி சர்டிபிகேட்டும், ஒரு நேர்த்தியான ஸ்ட்ராப், ஒரு வெல்வெட் பெட்டியும் இனாமாகக் கொடுக்கப்படும். பாக்கிங், விற்பனை வரி, தபாற் செலவு இலவசம். ஆர்டர்கள் வி. பி. பி. மூலம் அனுப்பப்படும்.

**இலவசம்**

புது வருஷ காலண்டரும், மடக்கக் கூடிய சீப்பும் இணைக்கப்பட்ட தையல் இல்லாத அமெரிக்கன் பிளாஸ்டிக் மணிபர்ஸ் ஒன்றும் ஒவ்வொரு கடிகாரத்துடனும் இலவசமாக அனுப்பப்படும்

குறைந்த விலைகளின் விவரம் கீழ்க்காணுமாறு:



வாடர் ப்ரூப், ரேடியம் சைஸ் 10½

தெ. ரூ.
1 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 49/-
2 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 51/-
15 க்ரோம் ஸ்டீல் பேக் 17 ஜுவல்ஸ் 59/-
16 ரோ.கோ.ஸ்டீல் பேக் 17 ஜுவல்ஸ் 61/-



சிறிய ரவுண்டு சைஸ் 9¾

தெ. ரூ.
21 பிரைட் க்ரோம் கேஸ் 4 ஜுவல்ஸ் 22/-
22 பிரைட் க்ரோம் கேஸ் 7 ஜுவல்ஸ் 29/-
3 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
4 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



சென்டர் செகன்ட் சைஸ் 9¾

23 பிரைட் க்ரோம் கேஸ் 7 ஜுவல்ஸ் 30/-
5 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
6 ரோ.கோ.ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



வளைவு சைஸ் 7¾

24 ரோ.கோ.ஸ்டீல்பேக் 5 ஜுவல்ஸ் 30/-
7 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
8 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



டன்னோ சைஸ் 6¾

9 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
10 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



லேடீஸ் சைஸ் 5¼

11 ரோ.கோ. ஸ்டீல்பேக், ஸில்க் ஸ்ட்ராப்,
பேன்ஸி டயல் 15 ஜுவல்ஸ் 50/-



லேடீஸ் சைஸ் 5¼

25 ரோல்டு கோல்டு ஸ்டீல்பேக்
ஸில்க் கார்டுடன் 15 ஜுவல்ஸ் 50/-



ரவுண்டு சைஸ் 8¾

26 பிரைட் க்ரோம் கேஸ், லேடி.
பிரிண்ட் ரேடியம் டயல் 22/-

**PEARL WATCH CO., FORJETT STREET, BOMBAY-26**




ரங்கசாமிக்குச் சில நாட்களாகத் தூக்கமே பிடிப்பதில்லை. அதனால் அவர் ஒரு நோயாளி என்று நினைத்துவிடக் கூடாது. அவரைப் பார்த்த யாருமே அப்படிச் சொல்ல மாட்டார்கள். சொல்லுவதற்குத் தைரியமும் வராது. விநாயகப் பெருமானோடு போட்டி போட்டுக் கொண்டிருந்த அவரது திரு உருவத்துக்கு வேழமுகம் ஒன்றுதான் தேவையாயிருந்தது.

ஆனால் ரங்கசாமி தூக்கமில்லாமல் தவித்ததற்குக் காரணம் வேழமுகம் இல்லையே என்பதற்காக அல்ல; சிறிது காலமாகத் திருப்பள்ளி கொள்ளும் நிலையில் இருந்து வந்த தமது வியாபாரத்தைக் குறித்துத்தான் அவரது கவலை யெல்லாம். அந்தக் கவலைதான் அவரைத் தூங்கவொட்டாமல் அடித்தது.

ரங்கா கபே சிற்றுண்டி என்றால் முன்பெல்லாம் அதற்கு அலாதி மதிப்பு இருந்து வந்தது. அந்த ஹோட்டலில் டிபன் சாப்பிட்டால் ஒரு தனிக் கௌரவம் இருப்பதாகக் கூடச் சிலர் சொல்லிக் கொண்டதாகக் கேள்வி. ஊரில் எந்தப் பெரிய மனிதர் யாருக்குப் ‘பார்ட்டி’ கொடுத்தாலும் ரங்கா கபேதான் அந்தப் ‘பார்ட்டி’யை ருசிகரமாக நடத்தி வைக்கும். எத்தனையோ ஸ்தாபனங்களின் திறப்பு விழாக்களுக்கு ரங்கா கபேயின் சிறந்த சிற்றுண்டி உபயோகப் பட்டிருக்கிறது. எத்தனையோ ஸ்தாபனங்களின் மூடு விழாக்களுக்கு ரங்கா கபே டிபன் வழங்கியிருக்கிறது. எத்தனையோ பிரமுகர்களின் வரவேற்பு உபசாரத்தின் போது ரங்கா கபே பிரதான அங்கம் வகித்து மேற்படி விழாவை ரஸமுள்ளதாகச் செய்திருக்கிறது. எத்தனையோ உத்தியோகஸ்தர்களின் பிரிவு உபசாரங்களுக்கு ரங்கா கபே ஒரு அணியாகத் திகழ்ந்திருக்கிறது.

இப்படிப் பொது மக்களின் ஏகோபித்த ஒரு முகமான ஆதரவுடன் நடந்து வந்த ரங்கா கபேயின் உரிமையாளர் ஸ்ரீமான் ரங்கசாமி அவர்கள்தான் என்று சொல்ல வேண்டிய அவசியம் இல்லை அல்லவா?

இவ்வளவு சீரும் சிறப்பும் பெற்றுப் பெரும் புகழும் ஓங்கி வளர்ந்திருந்த ரங்கா கபேயின் உரிமையாளர் ரங்கசாமிக்குக் கவலைப் படும்படியாக என்ன வந்து விட்டது என்று கேட்கிறீர்களா?

அபாரப் பிரக்யாதியுடன் ஓடிக் கொண்டிருந்த ரங்கா கபேயின் வியாபாரத்தில் சிறிது மந்தம் ஏற்படவே, அது ஓட்டம் மாறி நடக்க ஆரம்பித்தது. கொஞ்ச நாட்களுக்கெல்லாம் நடையும் மாறி வியாபாரம் படுத்துக் கொண்டு நகர ஆரம்பித்தது. இந்த நிலையில்தான் ரங்கசாமி தூக்கம் பிடிக்காமல் தவித்தார். தூங்கி வழியும் தமது வியாபாரத்துக்கு ஒரு திருப்பள்ளி எழுச்சி பாடி எழுப்பி விட வேண்டும் என்று முயற்சி செய்தார்.

முன்பெல்லாம் ‘ரங்கா கபே’யில் எது கேட்டாலும் ‘இல்லை’ என்ற பதில்தான் சாதாரணமாகக் கிடைக்கும்.

“ரங்கா கபேயின் வெங்காய தோசைக்கு ஈடும் இல்லை, எடுப்பும் இல்லை. ஆனால் அது கிடைக்க வேண்டுமே!” “ரங்கா கபே பாதாம் அல்வாவைப் பார்த்தாலே போதும். ஆனால் அது கிடைக்க வேண்டுமே!” “ரங்கா கபே வடைதான் வடை. அதில் என்ன தடை? ஆனால் அது கிடைக்க வேண்டுமே!” என்றெல்லாம் சாப்பாட்டு ராமர்களின் அபிப்பிராயம் நகரம் முழுவதும் நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் பரவிக் கிடந்தது. இந்தமாதிரி ஒன்றும் கிடைக்காத காரணத்தினாலேயே அந்த ஹோட்டலுக்கு நல்ல பெயர் கிடைத்து விட்டது என்று சிலர் தத்துவம் பேசினார்கள்.

பண்ணின பட்சணங்களெல்லாம் மறுகணமே பறந்து போவதைப் பார்த்து ரங்கசாமி பூரித்துப் போவார். இப்படிப் பூரித்துப் போயிருந்த அவருக்கு மனம் வேதனைப் படும்படியாக அவர் ஹோட்டலிலேயே ஒரு சம்பவம் நடந்தது.

ஒரு நாள் ரங்கா கபேக்கு ஒருவர் வந்தார்; பட்சணங்கள் அடுக்கி வைத்திருக்கும் பீரோவுக்கு எதிரில் வந்து நின்று கொண்டு சர்வரைப் பார்த்து, “ஏன் அப்பா, இந்த மைசூர்ப் பாகு நல்ல நெய்யில் செய்ததுதானா? புதிசு தானே? உனக்குத் தெரியுமா?” என்று கேட்டார்.

சர்வர், “தெரியும், ஸார். நல்ல நெய்யில் செய்ததுதான்! புதிசு, ஸார். கொடுக்கட்டுமா?” என்று கேட்டான்.

வந்தவர், மீண்டும், “பட்சணங்களெல்லாம் சுத்தமாய்த்தானே இருக்கின்றன? உனக்குத் தெரியுமா?” என்று கேட்டார்.



அதற்கு சர்வர், "என்ன ஸார், அப்படிக் கேட்கிறீர்கள்? நான்தானே தினந்தோறும் பட்சணங்களை யெல்லாம் எடுத்துத் தூசி போகத் தட்டிவிட்டு மறுபடியும் தட்டுகளில் ஒழுங்காக அடுக்கி வைக்கிறேன்? இந்த பீரோவில் இருக்கும் பட்சணங்களை யெல்லாம் நாலு நாளாக நானேதான் சுத்தமாக வைத்துக் கொண்டிருக்கிறேன்! நீங்கள் என்னடா என்றால் 'உனக்குத் தெரியுமா?' என்று கேட்கிறீர்கள்!" என்றான்.

வந்தவர் 'ஹஹ், ஹஹ், ஹா' என்று சிரித்தார்.

அந்தச் சிரிப்பு ரங்கசாமியின் அடி வயிற்றைப் பற்றி யெரியச் செய்தது. அவர் கோபமெல்லாம் சர்வர் மேலேதான் திரும்பியது. ஆனால் வாயிலிருந்து வார்த்தை யொன்றும் வரவில்லை. வியாபாரம் மந்தமாய்ப் போனது அவரை அத்தனை தூரத்துக்குப் பாதித்து விட்டது.

ரங்கா கபேயின் பிரமாதமான வியாபாரம் படுத்துப் போனதற்குக் காரணம், அதே தெருவில் ராமவிலாஸ் என்னும் புதிய ஹோட்டல் ஒன்று திறக்கப்பட்டதுதான். அந்தப் புதிய ஹோட்டலின் சொந்தக்காரர் எமகாதகரா யிருந்தார். பிரமாதமாகத் தம் ஹோட்டலைப் பற்றி விளம்பரம் செய்தார். ஒலி பரப்பியின் மூலம் இசைத் தட்டு சங்கீதத்தை ஓயாமல் வைத்து அந்தத் தெருவையே கலக்கினார்.

ராமவிலாஸ் ஹோட்டல் வாசலில், "இந்த ஊரிலேயே உன்னதமான தின்பண்டங்கள் இந்த ஹோட்டலில் தான் தயாராகின்றன!" என்று பெரிய பலகையில் கொட்டை எழுத்தில் அழகாக எழுதி வைத்தார். ஊர் முழுவதும் இதைப் பற்றிய பேச்சாகவே இருந்தது.

ரங்கசாமி ஒன்றும் தோன்றாமல் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தார். அதற்கு ஏற்றாற்போல ரங்கா கபேயின் வியாபாரமும் மந்த கதியை அடைந்து கொண்டே வந்தது.

ரங்கசாமியின் வேதனையை அதிகப் படுத்துவதற்கு இன்னொரு திடுக்கிடும் செய்தி கிடைத்தது. அந்தத் தெருவின் வட கோடியில் பீம விலாஸ் என்னும் ஒரு புது ஹோட்டல் ஆரம்பமாகப் போகிறது என்னும் செய்திதான் அது.

குறித்த தேதியில் பீம விலாஸ் ஹோட்டல் ஒரு பிரபல பிரமுகரால் திறந்து வைக்கப் பட்டது. துண்டுப் பிரசுரங்களை அள்ளி வழங்கி அந்தப் புதிய ஹோட்டல் முதலாளி அபாரமாக விளம்பரம் செய்தார். அவர் தம் ஹோட்டல் வாசலில் ஒரு பெரிய பலகையில் கொட்டை யெழுத்தில், "அகில உலகத்திலும் உயர்ந்த தின்பண்டங்களைத் தயார் செய்வது இந்த ஹோட்டல்தான்!" என்று எழுதி வைத்தார். பீம விலாஸ் ஹோட்டலில் தயாராகும் பக்ஷணங்கள் மிகவும் உயர்ந்தவை என்று ருசுப்படுத்தும் பொருட்டு, அதன் சொந்தக்காரர் அவைகளை மிகவும் உயரமான பீரோவில் அடுக்கி வைத்தார். அங்கு தயாராகும் காப்பி, டீ முதலிய பானங்களும் உயர்ந்தவை என்பதைக் குறிக்கும் பொருட்டு, சர்வர்கள் உயரமான பெஞ்சியின் மேல் ஏறிக் கொண்டு ஆற்றி ஆற்றிக் கொடுத்தனர். அங்கே டிபன் சாப்பிடுபவர்களும் மாடிக்குப் போக வேண்டியிருந்தது.

ராமவிலாஸ், பீம விலாஸ் ஹோட்டல்களின் வளர்ச்சியைப் பார்த்துக் கொண்டு ரங்கசாமியினால் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை. செலவைப் பார்க்காமல் தாமும் விளம்பரம் செய்து ரங்கா கபேக்குப் புத்துயிர் கொடுத்துப் பார்த்தால் என்ன என்று யோசிக்கலானார். சாதாரணமாகவே ஜனங்களுக்குப் புதிதாக ஆரம்பிக்கப் பட்டிருக்கும் ஹோட்டலில் ஒரு மோகம் உண்டாவது இயல்பல்லவா? ஆகவே, ஜனங்கள் ரங்கா கபேக்குப் புத்துயிர் கொடுக்க ரங்கசாமி எடுத்துக் கொண்டிருந்த முயற்சிகளைப் பாராட்டி அவரை ஆதரிக்கவில்லை.

ரங்கசாமி எதற்கும் மனந் தளர்ந்து விடவில்லை. மேலும் மேலும் ரங்கா கபேயைப் பழைய நிலைக்குக் கொண்டு வருவதற்கு வேண்டிய நூதன முயற்சிகளை யெல்லாம் செய்து கொண்டே யிருந்தார்.

திடீரென்று ஒரு நாள் ரங்கா கபேக்குப் பிரமாதமான புகழ் ஏற்பட்டு விட்டது. அந்த ஹோட்டல் வாசல் இத்தனை நாளாகத் திருவிழா முடிந்த ஆலயம் மாதிரி ஓய்ந்து கிடந்தது. பழைய அன்பர்கள் சிலர், ரங்கசாமியிடம் தனி அன்பு உள்ளவர்கள், அந்த ஹோட்டலை ஆதரித்து வந்தனர்.

இன்று அந்த ஹோட்டல் வாசலில் மாபெருங் கூட்டம் கூடியிருந்தது. வெளியே வாசலில் ஒரு பெரிய 'க்யூ' வரிசையில் ஜனங்கள் உள்ளே சென்று கொண்டிருந்தனர். பில் பணத்தைக் கொடுத்து விட்டு வெளியே வரும் வழியிலும் ஒரு பெரிய 'க்யூ' அசைந்து ஆடி நகர்ந்து கொண்டிருந்தது.

இந்தத் திடீர் மாறுதலுக்குக் காரணம் ரங்கசாமி மூளையைக் குடைந்து கொண்டு தமது மேதையைச் செலவு செய்து பிரமாதமாக விளம்பரம் செய்ததுதான். முதல் காரியமாக ரங்கா கபேயை க்யூ ரங்கா கபேயாக மாற்றினார். அடுத்தபடியாக ஹோட்டல்வாசலில் ஒரு பெரிய போர்டு எழுதி வைத்தார். அந்த ஊர் ஜனங்களின் மனசைப் பெரிதும் கவர்ந்த அந்த விளம்பரந்தான் என்ன?

"அகில உலகத்திலும் சிறந்த தின்பண்டம் கிடைப்பது அதிசயமல்ல. இந்த வட்டாரத்தில், இந்தத் தெருவிலேயே, நல்ல தின் பண்டங்களைத் தயார் செய்வது இந்த ஹோட்டல் தான்!"என்று அந்தபோர்டில்எழுதியிருந்தது.

# படித்துப் பாருங்கள்!

## ஹம்ஸானந்தி

நீண்ட நாட்களாக நல்ல தமிழில் சிறு கதைகள் எழுதி வருபவர்களில் 'ஜீவா' ஒருவர். அவருடைய நான்கு கதைகள் கொண்ட புத்தகம் ஒன்று இப்பொழுது வெளியாகி யிருக்கிறது. நான்கு கதைகளும் நான்கு வெவ்வேறான விஷயங்களை அடிப்படையாகக் கொண்டவைகளாக இருக்கின்றன. 'உடன் பிறந்தவள்' என்ற கதையில் சந்தர்ப்பத்தின் கோளாறினால் தமக்கைக்குத் துரோகம் இழைத்து விட்ட தங்கையின் மனத் தாங்கலை உள்ளம் உருக்கும் வகையில் கூறப்பட்டிருக்கிறது. 'தந்தையின் வஞ்சம்' என்ற கதையோ தற்காலக் கல்வி முறை நமது இளைஞர்களை மடமையும் அர்த்தமற்ற ஆணவமும் கொண்டவர்களாக உருமாற்றி யனுப்புகிறது என்ற விஷயத்தை வலியுறுத்துகிறது.

இந்தப் புஸ்தகத்துக்குத் தலைப்பாக விளங்கும் ஹம்ஸானந்தி என்கிற கதை இத் தொகுதியிலேயே தலையாய கதையாக இருக்க வேண்டும் என்ற நம்பிக்கை ஏற்படுகிறதல்லவா! அந்தக் கதையின் கதாநாயகி 'ஒரு பாடகி, நடிகையும் கூட'. சமூகத்தில் வழுக்கி விழுந்த சகோதரிகளின் இனத்தைச் சேர்ந்தவள். ஆனால் அவள் விடாப் பிடியாக எழுந்திருக்க முயலுகிறாள். ஆனால் சூழ்நிலையும் சந்தர்ப்பமும் மறுபடியும் அவளை வழுக்கி விழவே செய்கின்றன. ஆயினும் அத்தகைய சந்தர்ப்பங்களை எதிர்த்துப் போராடித் தன் லக்ஷியத்தை அடைந்து விடுகிறாள். தன் மன வலிமையால் எழுந்து நின்றே விடுகிறாள்! இத்தகைய பலதிறப்பட்ட கதைகள் படிப்போரின் மனத்தைக் கவர்ந்து மகிழ்வூட்டுகின்றன. பிரசுரம்: ஜீவோதயம் பிரசுரம், சௌராஷ்டிர நகர், சென்னை 24. விலை ரூ. 1—4—0.

## செங்கரும்பு

பெரிய மிராசுதார் பெண் சொக்கிக்கும் ஏழை கண்ணுச்சாமிக்கும் எப்படிக் காதல் பிறந்து வளர முடியும் என்று காதல் கதை படித்த அநுபவசாலிகள் கேட்க மாட்டார்கள். காதல் தத்துவம் காலமும் கற்பனையும் கடந்து நிற்பது. காசுக்கும் பணத்துக்கும் எட்டாதது. கண்ணுச்சாமியும் சொக்கியும் புரிந்த காதல் கலியாணத்தில் முடியவில்லை. அது அவர்களுடைய பூத உடல்களை அழித்து விட்டுத் தானும் சூக்ஷ்மமாக அவர்களிடம் குடிகொண்டது. அதாவது, பெரிய மிராசுதாரின் சூழ்ச்சியால் கண்ணுச்சாமி கொல்லப்பட்டான்; அதையறிந்த சொக்கி தானும் தற்கொலை புரிந்து கொண்டு காதலன் கண்ணுச்சாமியை அடைந்தாள். "மயானத்து நிலவில்" என்ற இந்தக் கதை வேகமாய்ச் செல்லுகிறது.

"மனோரஞ்சிதம்", "செங்கரும்பு" என்னும் இரண்டு கதைகளிலும் காதல் சுவை கொஞ்சம் புதுமாதிரியாகவே ததும்புகிறது; "செங்கரும்"பில் அது இனிமையுடன் பூர்த்தியாகிறது. "மனோரஞ்சித"த்தில், இளமையில் இனிமையாக ஆரம்பித்த காதல் சரியான பருவத்தில் பூர்த்தி பெறாமல் போய் விடுகிறது. மீண்டும் பழைய காதலர்கள் சந்தித்தும் அது பூர்த்தியாக வில்லை.

"வெறியும் முறையும்", "பலி", "பிள்ளை வரம்" முதலிய கதைகளும் வெவ்வேறு சுவைகளை காட்டி மகிழ்விக்கின்றன.

எழுதியவர்:— "அகிலன்"; பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை — 18; விலை: ரூ. 1—4—0.

## இந்து மத ஸாரம்

தருமம், முக்தி, பிரவிர்த்தி மார்க்கம், நிவர்த்தி மார்க்கம், இராஜ யோகம், ஞான யோகம், கர்ம யோகம், பக்தி யோகம் முதலிய பல வார்த்தைகள் இந்து சமயத்தைப் பற்றிக் கூறும் போது கேட்டிருக்கிறோம். அவற்றைப் பற்றித் தெளிவாக இந் நூலில் விளக்கப்பட்டிருக்கிறது. சுவாமி நிர்வேதானந்தர் ஆங்கிலத்தில் எழுதிய நூலின் மொழி பெயர்ப்பாகும் இந்நூல்.

மொழிபெயர்த்தவர்: சுவாமி பரமாத்மானந்தர்; பிரசுரம்: ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை—4; விலை: ரூ. 2—4—0.

## நிர்மலா

செல்வத்தில் மிதந்தாள் நிர்மலா. ஆனால் அவள் ஓர் அநாதை. வளர்த்தவனையே கடிக்கும் பாம்பின் இனத்தைச் சேர்ந்தவன் ஜகதீசன். விதியின் விளையாட்டினால் நிர்மலா அவனிடம் சிக்கினாள். லட்சியத்துக்காகவே வாழ்ந்த ஒரு டாக்டரின் துணிகரச் செயல்கள் இந்தக் கதையில் சிக்கல் நேராமல் பார்த்துக் கொள்கின்றன. ஆகவே, விபரீதம் எதுவும் நிகழ்ந்து விடாமல் கதை ஒழுங்காகவே முடிந்து விடுகிறது.

எழுதியவர்: ஆர். எஸ். மணி; பிரசுரம்: ஞான மணிப் பிரசுரம், சென்னை 17. விலை ரூ. 1—8—0.




## 5. இருக்கவே செய்கிறார்கள் கவிஞர்

நடனத்தைப் பார்த்த ஒருவன்,— 'அடாடா நொண்டி அல்லவா இவன், எவ்வளவு தள்ளாடிப் போகிறான். கீழே விழுந்து பிட்டி கழன்று போகும் போலிருக்கிறதே' என்று பயந்து போனானாம்.

இப்படிக் கஷ்டப்பட்டுப் போயிருக்கிறார்கள் இலக்கியத்திலுள்ள நாடகத்தைப் பார்த்து விட்டு நம்மில் சிலர். நாடகம் என்பதே ஞாபகத்துக்கு வருகிறதில்லை; உண்மையாக நடந்த சம்பவம் என்று எண்ணி விடுகிறார்கள். ஹாஸ்யம் போச்சு, விநயம் போச்சு, சிருஷ்டி போச்சு, பொருளே ஒழிந்து போச்சு என்று வருந்த வேண்டியிருக்கிறது.

ஆகவே நாடகத்தை நாடகமாகவே பாவிக்க வேண்டும். அப்போது பொருள் விளங்கும். பாடலை நாம் அனுபவிப்போம்.

∴

பொய்யா மொழிப் புலவர் சோழ மன்னனது சமஸ்தான வித்வான். சோழ நாட்டில் அவருக்குப் பெரிய புலவர் என்ற பேர். அவர் பாண்டியனைக் காணுவதற்காகவும் தன் புலமையைப் பாண்டியனிடம் அரங்கேற்றுவதற்காகவும் மதுரைக்கு வந்தார்,

பாண்டியனும் புலவரை வரவேற்று மிக்க உபசாரத்தோடு தன்னுடன் இருக்கச் செய்து அவருடன் பல விஷயங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தான். சிறிது நேரத்தில் புலவர்களைப் பற்றியும் பேச்சு வந்தது.

பாண்டியன் சொன்னான்: "முற்காலத்தில் கவிஞர்கள் இருந்தார்கள். கவிகளும் இருந்தன. இப்போது கவிஞர் யாரும் இல்லை. தற்காலத்துக் கவி ஒன்றும் கவியாக இல்லைதான்" என்று சொல்ல நேர்ந்து விட்டது.

பொய்யா மொழிப் புலவர் பாடு கஷ்டமாய்ப் போய்விட்டது. ஆனாலும் ஒரு கை பார்த்து விடலாம் என்று துணிந்து சொன்னார்.

"பாண்டி மன்னனே, நான் இதற்கு சாமான்ய முறையில் பதில் சொல்லி முடியாது. என்னுடைய கட்சியை நிதர்சனமாக நிரூபித்தே காட்டுகிறேன். தயவு செய்து கொஞ்சம் எழுந்தருள வேண்டும்" என்று சொல்லிச் சங்கப் பலகை ஒரு காலத்தில் இருந்த குளத்துக்குப் பாண்டி மன்னனை அழைத்துக் கொண்டு போனார்.

சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பது பேரும் மறைந்து போன பிறகு சங்கப் பலகை குளத்தில் அமிழ்ந்து விட்டது. என்பது புராணம்.

பாண்டியனும் புலவரும் குளத்துக் கரையில் நிற்கிறார்கள். 'குளத்தை நோக்கிப் பாடுகிறார் புலவர்.

"பூவேந்தர் முன்போல்ப்
புரப்பார் இலையன்றி"

பாண்டியன் பார்த்தான். ஏது புலவர் தன்னையல்லவா தாக்க ஆரம்பித்து விட்

டார் என்பதாக நினைத்தான் ஆனால் ஒன்றும் சொல்லத் துணியவில்லை. புலவர் மறுபடியும் பாட்டை ஆரம்பித்தார் :

'' பூவேந்தர் முன்போலப்
புரப்பார் இலையன்றிப்
பாவேந்தர் 'உண்டென்னும்
பான்மையில்—மாவேந்தன்
மாறன் அறிய
மதுரா புரித்தமிழோர்
வீற்றணையே சற்றே
மித !''

என்று பாட்டை முடித்தாரோ இல்லையோ மிதந்து விட்டது சங்கப் பலகை! பாண்டியனும் மிக்க வியப்போடும் சந்தோஷத்தோடும் சங்கப் பலகையைப் பார்த்த வண்ணமாய் நிற்கிறான். தன் முன்னோர்களான பாண்டி மன்னர்களது புகழ் அல்லவா உலகங் காண வெளி வந்திருக்கிறது !

[பூவேந்தர் முன் போலப் புரப்பார் இலையன்றி : பூமியை ஆளும் அரசர்கள் இருக்கிறார்களே அவர்கள் முன்னைய அரசர்களைப் போல் ஆதரிக்க வில்லை என்பதல்லால்; பாவேந்தர் உண்டென்னும் பான்மையால் : கவிராயர்கள் இப்போதும் இருக்கத்தான் செய்கிறார்கள் என்கிற உண்மையினாலே ; மாவேந்தன் மாறன் : புகழ்பெற்ற அரசனான பாண்டியன் (மாறன் : பாண்டியன்) அறிய : தெரிந்து கொள்ளும்படி ; வீற்றணையே சற்றே மித : பெருங்கீர்த்தி கொண்ட சங்கப் பலகையே கொஞ்சம் மேலே வந்து மிதப்பாயாக—பாண்டியன் தெரிந்து கொள்ளட்டும் !]

* * *

கவி என்றால் உள்ளத்திலுள்ள உண்மையான உணர்ச்சி வெளியாக வேண்டும். உள்ளத்தில் வியப்பு இருந்தால் அந்த வியப்பு உண்மை ஒளியோடு வெளியாக வேண்டும். கவியில் சோகமோ, கோபமோ, ஹாஸ்யமோ, அவைகள் உண்மையான சோகமாக இருக்க வேண்டும், உண்மையான கோபமாக இருக்க வேண்டும், உண்மையான ஹாஸ்ய உணர்ச்சியாக இருக்க வேண்டும்.

அப்படி இல்லையென்றால் கவியல்ல, வெறும் வார்த்தைக் கோவையான செய்யுள் தான். இந்த விஷயத்தில் பண்டைய தமிழ்க் கவிஞர்கள் மிக்க அக்கறை கொண்டிருந்தார்கள். அவர்கள் கவிகளில் அத்தகைய உண்மை கிடக்கும், அந்த உண்மை அழகான உருவத்தைக் கொடுக்கும் கவிக்கு.



அம்மா:—கிட்டு, இந்தக் குடத்தை எடுத்துக் கொண்டு போய் ஒரு குடம் கிணற்றிலே யிருந்து ஜலம் இழுத்துக் கொண்டு வா ! போடா, கொஞ்சம் ஒத்தாசை பண்ணு, எனக்கு.

கிட்டு :—போ, அம்மா ! என்னாலே முடியாது. எனக்கு 'ஸ்கௌட்' வகுப்புக்குப் போக நாழியாயிற்று !

* * *

ஒரு நாடகம்.

மதுரையில் ஏழை அர்ச்சகன் ஒருவன் இருந்தான். மிக்க பக்தியுடன் சொக்கலிங்கேசுவரருக்குப் பூஜையும் வழிபாடுகளும் செய்து வந்தான். ஆனால் அவனுடைய தரித்திரம் நித்திய தரித்திரமாகவே இருந்தது.

அதன் மேல் சொக்கலிங்கத்திடம் விண்ணப்பித்தான். ''அடிகளே, என்னுடைய தரித்திரம் நீங்கும்படி ஒரு தமிழ்க் கவி எழுதிக் கொடும். அதைப் பாண்டியனது தமிழ்ச் சங்கத்தில் சமர்ப்பிக்கிறேன். எனக்கு நல்ல வெகுமதி கிடைக்கும். தரித்திரமும் தீரும்'' என்று சொன்னான்.

அர்ச்சகன் மேல் இரக்கங் கொண்ட சொக்கலிங்கர் ஒரு காதல் பாடலை எழுதிக் கொடுத்தார்.

அர்ச்சகன் அதைக் கொண்டு போய்ப் பாண்டியன் வீற்றிருந்த சங்கத்தில் சமர்ப்பித்தான்.

தலைமைப் புலவராய் இருந்த நக்கீரர், பாடலை வாங்கிப் பார்த்தார். பாடலைச் சங்கத்தாருக்கும் வாசித்துக் காட்டி விட்டு ''இது வெறுஞ்செய்யுள். உண்மை உணர்ச்சி, அதாவது காதல் உணர்ச்சி இல்லை. ஆகவே கவி உருவம் என்பது இதில் இல்லவே இல்லை. சங்கம் ஒப்புக் கொள்ள முடியாது'' என்று ஓலையை அர்ச்சகன் கையில் திருப்பிக் கொடுத்து விட்டார்.

அர்ச்சகன் பாடு ரொம்ப ரொம்பக் கஷ்டமாய்ப் போய் விட்டது. 'என்னடா இது ! நம்முடைய கடவுளையே அல்லவா கேவலம் பண்ணி விட்டான் புலவன்' என்று மனம் நொந்தவனாய்ச் சொக்க

லிங்கேசுவரரிடத்தில் போய் நடந்த விஷயத்தைச் சொன்னான்.

பார்த்தார் சொக்கலிங்கேசுவரர். புறப்பட்டார். சங்கத்துக்கே போய்ச் சேர்ந்தார். ஒரு பெரிய புலவர் தோரணையில், சரிகைத் தலைப்பாகை, சரிகை அங்கவஸ்திரம், தங்கம் கட்டிய ருத்ராக்ஷ வடம் எல்லாமாய்ப் போய்ச் சேர்ந்தார்.

நக்கீரரைப் பார்த்து, "நம்முடைய பாடலில்க் குற்றம் கண்டது நீர்தானா?" என்று கேட்டார்.

"நான்தான்" என்றார் நக்கீரர்.

"என்ன குற்றம்?" என்று கேட்டார் இறையனார்.

"உண்மை உணர்ச்சியோ, கவி உருவமோ ஒன்றும் இல்லை" என்றார் நக்கீரர்.

இறையனாருக்கு நக்கீரர் சொன்னது வாஸ்தவந்தான் போலிருக்கிறதே என்று உள்ளுக்குள்ப் பட்டு விட்டது.

இருந்தாலும் விட்டுக் கொடுத்துவிடக் கூடாது என்று எண்ணி, நக்கீரரைப் பயமுறுத்துவதற்காக மெள்ள நெற்றிக் கண்ணைக் காட்டினார்.

"நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றம் தான்" என்று ஒரு பெரும் போடு போட்டார் நக்கீரர். புலவர்கள் எல்லாரும் கைதட்டி ஆமோதித்து விட்டார்கள்,

சிவபெருமானுக்குப் பெருத்த அவமானமாய்ப் போய் விட்டது. நக்கீரன் பயப்படுகிற ஆசாமியாக இல்லை என்று எண்ணி வசவிலே இறங்கினார்.

"ஏய் நக்கீரா! நீ என்ன, சங்கறுத்து வளையல் செய்கிற கீழான குலத்தைச் சேர்ந்தவன் தானேடா?" என்று ரொம்ப ரொம்ப இகழ்ச்சியோடு பேசினார்.

பதில்ச் சொல்லுகிறார் நக்கீரர்.

சங்கறுப்ப(து) எங்கள்குலம்
சங்கரர்க்கங் கேதுகுலம்

குலம் கெட்ட ஆள் நம்முடைய சொக்கலிங்கர் என்று ஆய்விட்டது.

சங்கறுப்ப(து) எங்கள்குலம்
சங்கரர்க்கங் கேதுகுலம்,
பங்கமுறச் சொன்னால்ப்
பழுதாமே—சங்கை
அரிந்துண்டு வாழ்வோம்
அரனாரைப் போல
இரந்துண்டு வாழோம்
இவண்!

அவமானம் பொறுக்க முடியவில்லை, அப்படியே மறைந்து போய் விட்டார் சொக்கலிங்கப் பெருமான்.




## 3. மந்திரவாதியின் உதவி

சூரிய குமாரனுடைய பதிலைக் கேட்டதும் கிழ மந்திரவாதிக்கு உச்சி குளிர்ந்து விட்டது.

'சூரியகுமாரன், எவ்வளவு பண்பாடு உள்ளவனாக இருக்கிறான்! என்னுடைய ஆசியையும் அல்லவா கேட்கிறான்? அது மட்டுமில்லை. என் ஆசியைப் பெற்றால் எத்தகைய இடையூறு நேர்ந்தாலும் வென்று விடுவது நிச்சயம் என்பதாக நம்புகிறானே? எப்படிப்பட்ட அருங்குணம் வாய்ந்தவனாக இருக்கிறான் இந்த மூன்றாவது ராஜகுமாரன்! இவன் எடுத்த காரியம் யாவற்றிலும் வெற்றியடைய வேண்டும். அதற்கு என்னாலான உதவி செய்ய வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டான் மந்திரவாதி.

இருந்தாலும் மந்திரவாதிக்கு ஒரு சந்தேகம். சூரியகுமாரன் உபசாரத்துக்காக இந்த மாதிரி "உங்கள் ஆசி பெற்றால் போதும்" என்று சொன்னானோ என்பதாக.

ஆகவே, "என் ஆசியெல்லாம், என்ன உதவி விடப் போகிறது? நீ எடுத்துள்ள காரியம் மிகப் பெரிய காரியம். நானோ மிகச் சாதாரண மனிதன்" என்றான் மந்திரவாதி.

"அப்படிச் சொல்லவே கூடாது, தாத்தா! நீ மிகச் சாதாரண மனிதனானாலும், உன் ஆசியின் சக்தி அசாதாரணமாக இருக்கலாம். அதன் பயனாக என் காரியம் வெற்றியடையலாம். ஆகவே, உன் மனப் பூர்வமான ஆசியை நான் இதய பூர்வமாகக் கேட்கிறேன். கொடுக்க வேண்டும்" என்றான் சூரியகுமாரன்.

இதைக் கேட்டதும் அந்த மந்திரவாதியடைந்த சந்தோஷம் இவ்வளவு அவ்வளவல்ல. சூரிய குமாரனை அப்படியே மார்போடு கட்டிக் கொண்டான். "என் அருமை இளவரசே! உனக்கு வெற்றி கிட்டுவதாக. தொட்ட காரியங்கள் எல்லாம் துலங்குவதாகுக. அவ்வப்போது சிற்சில இடையூறுகள் நேரலாம். அவற்றையெல்லாம் நீ வெற்றி கொள்வாய். அதற்கு உறுதுணையாக என் மந்திரக் கோலைத் தருகிறேன். இதன் மகிமையால் மலை போன்ற கஷ்டங்கள் எல்லாம் பனிபோல் நீங்கிவிடும்" என்று சொல்லி மந்திரக் கோலைக் கொடுத்தான் கிழவன்.

ராஜகுமாரன் அதை வாங்கிக்கொண்டான். அப்பொழுது அவன் அடைந்த சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல.

மந்திரக்கோலைப் பெற்றுக் கொண்ட ராஜகுமாரன், கிழவனிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்படலானான். அந்தச் சமயம் கிழ மந்திரவாதி, "இளவரசே, ஒரு நிபந்தனை" என்றான்.

"என்ன?" என்று கேட்டான் ராஜகுமாரன்.

"நீ திரும்பி வரும் போது, ஞாபகமாக இந்த மந்திரக்கோலை என்னிடம் திருப்பிக் கொடுத்து விட வேண்டும்."

"அப்படியே ஆகட்டும்" என்று சொல்லி ராஜகுமாரன் புறப்பட்டான்.

ஒரு தாவுத் தாவிக் குதிரை மீது ஏறி அமர்ந்தான். தனது எஜமானர், முதுகின் மீது ஏறி அமர்ந்து விட்டார் என்றறிந்ததும் நாலு கால் பாய்ச்சலில் குதிரை ஓடத் தொங்கியது. ராஜகுமாரனும் கம்பீரமாக அமர்ந்து குதிரையைத் தட்டிக் கொடுத்து உற்சாகப் படுத்திக் கொண்டே சென்றான்.

காட்டுப் பிரதேசமாதலால் மரங்கள் அடர்ந்து வழியெல்லாம் நிழலாக இருந்தது. குளு குளு என்று காற்று வீசிக் கொண்டிருந்தது. சூரிய குமாரனுடைய சிந்தனை வேலை செய்யத் தொடங்கியது.

காட்டில் பறவைகள் எவ்வளவு உற்சாகமாக ஆடிப் பாடிக் களிக்கின்றன! விலங்குகள் கவலையின்றித் திரிகின்றன. இவைகளுக்கு நோயோ நொடியோ வருவதாகத் தெரியவில்லை. ஆனால் நகர்ப் புறங்களில் வசிக்கும் இந்த மனிதர்களுக்கு மட்டும் ஏன் இப்படி வியாதியும் வெக்கையும் வருகின்றன?—இப்படியெல்லாம் யோசித்துக் கொண்டே சென்றான். அப்பொழுது திடீர் என்று உலுக்கிப் போடும் வகையில் ஒரு பயங்கரச் சத்தம் கேட்டது.

எட்டு கால்களும், காண்டாமிருகத்தைப் போன்ற தலையும், நான்கு கொம்புகளும், பதினாறு கண்களும் கொண்ட ஒரு விகார ஜந்து எதிரே வந்து கொண்டிருந்தது. அது வரும் போதே வாயைப் பிளந்து கொண்டு வந்தது. சூரியகுமாரனை விழுங்கிவிட ஆவல் கொண்டிருப்பதாகவே காணப்பட்டது. சூரியகுமா

ரன் அதன் அருகில் வரவும், அவன் மேல் பாயத் தொடங்கியது.

சூரியகுமாரன் சுத்த வீரன். அரச குடும்பத்தில் பிறந்தவனல்லவா? அதற்கேற்ப, பயங்கர மிருகம் தன் மீது பாய்வதைக் கண்ட அவன் இடையிலிருந்த வாளை உருவினான். அந்த பயங்கர மிருகத்துடன் அரை மணி நேரத்துக்கு மேல் கடும் போர் நிகழ்த்தினான். மிருகம் மிகுந்த வலிமை பொருந்தியதாக இருந்ததால், சூரிய குமாரனுடைய கத்தியை அவன் கையிலிருந்து விழச் செய்துவிட்டது. உடனே என்ன செய்வது என்று தெரியாது திகைத்து நின்று விட்டான். அடுத்த கணம் அவனையறியாமலே, தன் இடுப்பிலிருந்த மந்திரக்கோலை எடுத்துத் தாக்க முயன்றான். அந்தக் கணம் அவனுக்கு அது மந்திரக்கோல் என்ற நினைவே இருக்கவில்லை. ஆனால் மந்திரக்கோலை எடுத்துத் தாக்கிய மாத்திரத்தில், அந்த மந்திரக் கோல் அந்த விலங்கைத் தீண்டிய மாத்திரத்தில் அது கற்சிலையாக மாறி விட்டது. ஆச்சரியத்தினால் கண்களை அகல விழித்துப் பார்த்தது பார்த்தபடியே நின்று விட்டான் ஒரு விநாடி. பிறகுதான் அவனுக்குத் தான் கையில் பிடித்திருப்பது மந்திரக்கோல் என்பது நினைவு வந்தது. அந்த மந்திரக் கோலின் சக்தியினாலேயே பயங்கர மிருகம் கற்சிலையாக மாறிவிட்டது என்பதை அறிந்தான். உடனே அந்த மந்திரக் கோலை யளித்த கிழவனை நினைத்து வணக்கம் செலுத்தினான்.



இப்படி இன்னும் சில இடையூறுகள் வழியில் நேர்ந்தன. அவற்றையெல்லாம் சூரிய குமாரன் மந்திரக்கோலின் உதவியால் கடந்து விட்டான்.

இப்படிப் பத்து நாள் பல கஷ்டங்களைத் தாங்கிக் காட்டில் பிரயாணம் செய்த பிறகு, ஒரு மிகப் பெரிய மலையின் உச்சியை அடைந்தான். அந்த மலையுச்சியை அடைந்த வேளை மாலைவேளை. அந்தச் சமயம் மிகவும் களைத்து வேறு இருந்தான். அதனால் குதிரையை ஒரு மரத்தில் கட்டிவிட்டு, மற்றொரு மரத்தினடியிலிருந்த பாறையின்மீது இளைப்பாறச் சாய்ந்துகொண்டு உட்கார்ந்தான். சற்று நாழிகைக்கெல்லாம் சூரியன் மறைந்தான். மெல்ல இருள் கவியத் தொடங்கியது. வானத்தில் இங்குமங்குமாக நட்சத்திரங்கள் பிரகாசிக்கத் தொடங்கின. கொஞ்ச நாழிகையில் வான வீதியில் பூரண சந்திரனும் பவனி வரத்தொடங்கினான். தென்றல் தவழ்ந்து வந்து மெல்ல வீசியது.

சற்றைக்கெல்லாம் கல்கல் என்று சதங்கையின் ஒலி கேட்டது. காற்றில் சவ்வாது வாசனையும் அத்தர் வாசனையும் கலந்து வந்தது. இதையெல்லாம் தொடர்ந்தாற்போல் ஒரு நங்கை வந்தாள். வந்தவள், "என் மனசுக்குகந்த இளவரசே! வந்துவிட்டீர்களா?" என்று இதழ்களில் மோகனப் புன்னகை தவழக் கேட்டாள்.

உடனே சூரியகுமாரன் அலறிப் புடைத்துக் கொண்டு கண் விழித்துப் பார்த்தான். யாருமில்லை. நிலவொளியில் பாறையும் மரங்களும் தான் தெரிந்தன. 'சே, அதற்குள் தூங்கி விட்டோமே!' என்று நினைத்துக் கொண்டான். ஆனாலும், அவன் மனசில் இப்பொழுது கனவில் கண்ட நங்கையை முன்பு எப்பொழுதோ பார்த்தது போல் ஞாபகமிருக்கிறதே என்று நினைத்தான். "எப்பொழுது பார்த்தோம்? எந்த இடத்தில் சந்தித்தோம்? இவளுடன் சம்பாஷித்திருக்கிறாப் போலவும் தோன்றுகிறதே! என்ன பேசினோம் ஒன்றுமே நினைவுக்கு வரமாட்டேன் என்கிறதே! அடடா! எப்படிப்பட்ட அசட்டுத்தனம் பண்ணிவிட்டேன்? நான் அவ்வளவு சீக்கிரமாகத் தூக்கத்திலிருந்து எழுந்திருந்திருக்கக் கூடாது. அந்தக் கனவிலேயே அவளுடன் பேசி 'நீ யார்? உன்னோடு பேசினாற்போல் ஞாபகமிருக்கிறதே! எப்பொழுது சந்தித்தோம்?' என்று கேட்டிருக்க வேண்டும்!" இப்படிப் பல எண்ணங்கள் அலை பாய்ந்தன.

கடைசியில், கருகும் என்று இருண்டிக்கும் வேளையில் பளீர் என்று மின்னல் வெட்டுகிறாப் போல் அவன் அவளைச் சந்தித்தது எப்பொழுது என்பது பளிச்சென்று நினைவுக்கு வந்தது. அரண்மனையை விட்டுப் புறப்பட்ட அன்று கனவில் வந்த நங்கையல்லவா இவள் என்று நினைத்தான். அவன் உள்ளத்திலிருந்து 'ஆம், ஆம்' என்று ஆயிரங் குரல்களில் பதில் வந்தது. உடனே அவன் உள்ளத்தில் இனந் தெரியாத இன்பம் ஊற்றாகப் பெருக்கெடுத்தது. அதில் என்ன செய்வதென்று தெரியாமல் குபீர் என்று எழுந்து நின்றான். தூரத்தில் ஜோதி மயமானதோர் மாளிகை தெரிந்தது. (தொடரும்)




அறிவாளி! ஸெவன் ஓ' க்ளாக் ஸ்லாட்டெட் பிளேடுகளினால் தினசரி முகத்தை க்ஷவரம் செய்து கொள்கிறார்.



# ஸெவன் ஓ' க்ளாக் ஸ்லாட்டெட் பிளேடுகள்

முகத்தைச் சுத்தமாக க்ஷவரம் செய்திருப்பது முன்னேற்றத்தின் அறிகுறியாகும். ஆனால் தினசரி க்ஷவரம் செய்து வருதல் அவசியம். நாவிதனைக் கொண்டு க்ஷவரம் செய்வதால் அதிகச் செலவு நேரிடும்.

ஆனால், தினமும் சிக்கனமான முறையில், சுத்தமாக க்ஷவரம் செய்து கொள்வதற்கு ஸெவன் ஓ' க்ளாக் பிளேடுகள் கிடைத்திருப்பது ஓர் அதிர்ஷ்டமே. ஸெவன் ஓ' க்ளாக் பிளேடுகள் அதி கூர்மையானவை, சுத்தமாக க்ஷவரம் செய்பவை, நெடுநாள் உழைப்பவை, உண்மையான சிக்கனம் வாய்ந்தவை.

வெற்றியடைந்த, வசீகரத் தோற்றமுடைய, மனிதர்களோடு சேர்ந்து கொள்ளுங்கள்! தினசரி ஸெவன் ஓ' க்ளாக் பிளேடுகளினால் க்ஷவரம் செய்யுங்கள்.

# 7 o'clock

## ஸெவன் ஓ' க்ளாக் ஸ்லாட்டெட் பிளேடுகள்




10 ப்ளேடுகள் கொண்ட பாக்கெட் ரூ. 1

S 3 (1) TAM.



# கண் இழந்தவன்

எஸ்.வி.எஸ்.

அவனுக்கு வேண்டிய செல்வமிருந்தது. வீடு இருந்தது. நிலம் இருந்தது. அருமைத் தாயார் இருந்தாள். அன்புத் தங்கை இருந்தாள். இவ்வளவு இருந்தும் அவற்றையெல்லாம் பரிபூரணமாக அனுபவிக்க முடியாத நிலையிலிருந்தான். பாவம்!

ஆம், காலை இளம் கதிரவனின் வனப்பைப் பற்றிக் கேட்டிருக்கிறான் — கண்டதில்லை. மாலை மதியத்தின் மனோகரத்தைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறான், கண்களால் கண்டதில்லை. மணங் கமழும் முல்லையின் நறுமணத்தை முகர்ந்திருக்கிறான்–பார்த்ததில்லை. வண்ணப் பூவிதழ்களின் மென்மையை உணர்ந்திருக்கிறான். ஆனால் பார்த்ததில்லை. இப்படி அவன் வாழ்க்கையில் எல்லா இன்பங்களுமே பூரணத்துவம் பெறாதவைகளாகவே இருந்தன. அதற்குக் காரணம், அவன் ஒரு பிறவிக் குருடனாகப் பிறந்து விட்டதுதான்.

ஆனால் அவனுக்கோ கதிரவனைக் காண முடியவில்லையே என்றோ, மதியத்தைக் கண்டு மகிழவில்லையே என்றோ ஒரு சிறிதும் ஏக்கமிருந்ததில்லை. முன்பு ஒரு முறையாகிலும் கண்டிருந்தால் அல்லவோ இப்போது காண முடியவில்லையே, அந்த இன்பத்தை நுகரக் கொடுத்து வைக்கவில்லையே என்று ஏக்கம் உண்டாவதற்கு. ஆகவே அவன் வரைக்கும் கடவுள் விதித்த கருந்த காரத்தில் ஆனந்தமாகவே வாழ்ந்து வந்தான். ஆனால் அவனைப் பெற்றெடுத்த தாய்க்கும் அவன் மீது தன் உயிரையே வைத்திருக்கும் தங்கைக்கும் தான் எவ்வளவு வருத்தம். 'கடவுள் அவனுக்குக் கண் கொடுக்காமல் வஞ்சித்து விட்டானே' என்று கடவுள் மீது எவ்வளவு கோபம்!

இருப்பினும் அவன் தன் பின்னைக்குச் செய்து பார்த்த வைத்தியங்களுக்கும் ஒரு அளவில்லை. ஆலோபதி வைத்தியம், நாட்டு வைத்தியம், யுனானி வைத்தியம் என்று ஏதெல்லாமோ செய்து பார்த்தான். அந்த வைத்தியர்களிடமெல்லாம் பிறவிக் குருட்டை நிவாரணம் செய்யக் கூடிய மருந்தோ மந்திரமோ இருக்கவில்லை.

ஆகவே, அவன் தன் குருட்டுத் தனத்துடன் ஆனந்தமாகவே வளர்ந்து வந்தான். அவனுடைய தாயும் தங்கையும் அவனுடைய அவல நிலையைக் கண்டு ஏக்கத்துடனேயே இருந்து வந்தனர். ஆண்டுகள் பல சென்றன.

அப்பொழுது டாக்டர் சுகுமாரன் என்ற ஒரு கண் டாக்டர் மிகவும் பிரபலமடைந்து

வந்தார். அவர் புரியும் ஒவ்வொரு ஆப்பரேஷனும் வெற்றிகரமாக இருக்கிறது என்றும் பேசிக் கொண்டார்கள். அது மட்டுமல்ல, வைத்திய உலகத்தில் "ஆப்பரேஷன் வெற்றி தான், ஆனால் நோயாளிதான் இறந்து விட்டார்" என்பதாக ஒரு வழக்குச் சொல் உண்டு. அதற்கு முற்றும் மாறாகவே வைத்தியம் செய்து வருவதாக அவருக்குக் கீர்த்தி ஏற்பட்டு வந்தது. அதாவது ஆப்பரேஷன் மட்டும் வெற்றி யடைவதில்லை, ஆள் கூடப் பிழைத்து விடுகிறார் என்ற பெயர் நிலவி வந்தது. மேலும் பிறவிக் குருடாக இருப்பவர்களுக்கும் கண்ணளித்திருக்கிறார்; பார்வையளித்திருக்கிறார்; அவர் 'ஒரு கண்ணளிக்கும் கண்ணுதல்' என்ற புகழ் நிலவி வந்தது.

இந்தப் புகழ் நம்முடைய கதாநாயகனுடைய தாயார் காதிலேயும் விழாமலிருக்குமா?

அந்த டாக்டரைப் பற்றிக் கேட்டதிலிருந்து தன் பிள்ளையையும் அவரிடம் கொண்டு போய்க் காட்ட வேண்டும் என்று தீர்மானித்தாள், அந்த அம்மாள்.

"அப்பா, முருகேசா! சென்னைப் பட்டணத்திலே புதுசா ஒரு பெரிய டாக்டர் வந்திருக்கிறாராம். அவர் எத்தனையோ பிறவிக் குருடர்களை யெல்லாம் குணப்படுத்தி யிருக்கிறாராம். அவரிடம் உன்னையும் அழைத்துக் கொண்டு போய்க் காட்டலாம் என்று நினைக்கிறேன்" என்றாள் தாயார்.

"உன் இஷ்டம் போல், செய் அம்மா! நீ யாரண்டை யெல்லாம் வைத்தியம் பண்ணிக் கொள்ளச் சொல்கிறாயோ அவர்களிடம் எல்லாம் நான் பண்ணிக் கொள்ளத் தயாராக இருக்கிறேன்" என்றான் முருகேசன்.

அடுத்த நாளே சென்னையை நோக்கிப் பயணமாயினர். முருகேசன், அவன் தாயார், தங்கை, அவர்கள் குடும்ப நண்பரான கனகசபை ஆக நால்வருமாகப் புறப்பட்டுச் சென்றனர்.

* * *

**சீன்** டாக்டர் பின் வருமாறு சொன்னார்:

"அம்மா, உங்கள் பிள்ளையின் கண்களைப் பரிசோதனை செய்ததில் உங்கள் பிள்ளைக்குக் கண் பார்வை அளிக்க முடியும் என்ற நம்பிக்கை ஏற்படுகிறது. அப்படி என் வைத்திய சிகிச்சையினால் பெற்ற கண் பார்வை என்றென்றைக்கும் நிற்கக் கூடியதாக இருக்கலாம். அல்லது வெகு வெகு சொற்ப காலமே நீடிக்கக் கூடியதாகவு மிருக்கலாம். ஒரு மாத காலம் அல்லது பத்து நாள் இருக்கலாம். ஆயினும் சுமார் ஆறு மாத காலம் இங்கேயே தங்கிச் சிகிச்சை பெற்று வர வேண்டி யிருக்கும்" என்றார்.

"அதற்கென்ன? எத்தனை நாள் ஆனாலும், சரி, எவ்வளவு செலவு ஆனாலும் சரி, முருகேசனுக்குக் கண் பார்வை கிடைத்தால் போதும்" என்றாள் தாயார்.

"அம்மா, அப்படிப் பெறும் கண் பார்வை ஆயுளுக்கும் நிற்கக் கூடிய பார்வையாக இருக்கலாம், அல்லது வெகு வெகு சொற்ப காலமே நிற்கக் கூடிய பார்வையாக இருக்கலாம் என்பதையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள், அம்மா! அப்புறம் டாக்டர் ஏமாற்றி விட்டார். ஏமாற்றி நம்மிடம் பணத்தைக் கொள்ளை யடித்துக் கொண்டு போய்விட்டார் என்று என்னை அவதூறு கூறுவீர்கள்!" என்றார் டாக்டர் சுகுமார்.

"சே, சே! அப்படி யெல்லாம் சொல்வோமா, டாக்டர்! பத்து நிமிஷமானாலும் என்ன? என்னைப் பார்த்து, 'இவள்தான் என் தாய், இவள்தான் என் தங்கை!' என்று அவன் தெரிந்து கொண்டால் போதும். அதற்கு மேலும் கண் பார்வை யிருந்தால் நான் செய்த பூஜாபலன் என்று நினைத்துக் கொள்ளுகிறேன்; அவன் முன் பிறவியில் செய்த நற்பயன் என்று எண்ணிக் கொள்ளுகிறேன்; உங்கள் கைராசியின் மகிமை என்று கருதிக் கொள்கிறேன்" என்றாள்.

**பி**ன்னர் ஆறுமாத காலம் விடாமல் சிகிச்சை நடந்தது. காலையிலும் மாலையிலும் டாக்டர் வந்து முருகேசனைப் பார்த்து மருந்து போட்டு விட்டுப் போவார்.

முருகேசன் கண்ணுக்குப் போட்டிருந்த கட்டு அவிழ்க்கும் சமயம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. இன்னும் இரண்டொரு நாட்களில் முருகேசனுக்குப் போடப்பட்டிருக்கும் கண் கட்டை அவிழ்த்து, 'இதோ பாருங்கள் உங்கள் பிள்ளைக்குக் கண் பார்வை

## நீங்கள்தானா?



அங்கவஸ்திரக்காரர் :— அப்படியா! நீங்கதானா அந்த இளம் எழுத்தாளர்?




வந்து விட்டது' என்று சொல்வார் டாக்டர் என்று ஆவலுடன் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது டாக்டருக்குத் திடீர் என்று வெளியூரிலிருந்து அழைப்பு வந்தது. அதைக் கவனிக்கும் பொருட்டு அவர் புறப்பட்டுச் செல்ல வேண்டியதாகி விட்டது. அப்படிப் போகும் போது முருகேசனுடைய தாயாரைக் கூப்பிட்டு, "அம்மா, நான் வெளியூர் போக வேண்டியிருக்கிறது. இன்றைக்குக் கண்ணுக்குப் போட்டிருக்கும் கட்டை அவிழ்த்து விட்டேன். ஆயினும் கண்மீது போடப்பட்டிருக்கும் மருந்து, தானே காய்ந்து உதிரும் வரை பொறுத்திருக்க வேண்டும். அதைக் கையால் பிய்த்துக் கிய்த்து எடுத்து விடக் கூடாது. அதுவாக விழ வேண்டும். முற்றும் விழுந்த பின்னர்தான் இமைகளைத் திறக்கலாம்......?" என்று எச்சரிக்கை செய்து விட்டுச் சென்றார்.

* * *

நெற்றியினருகிலிருந்த மருந்தெல்லாம் உதிர்ந்துவிட்டது. மற்றப் பகுதியும் அன்றைக்குள் விழுந்து விடும். அன்றைக்கு அவன் கண் திறப்பான். அவனுக்குக் கடவுள் புண்ணியத்தில் பார்வை கிடைக்க வேண்டும். தன்னைப் பார்க்கவேண்டும் என்று முருகேசனின் தாயாரும் தங்கையும் ஆதுரப் பட்டார்கள். அவனைச் சூழ்ந்து சூழ்ந்து வந்தார்கள். அவன் படுக்கையை விட்டு அப்படி இப்படி நகரவே முடியவில்லை அவர்களால்.

அவர்கள் பரபரப்பைக் கண்ட முருகேசன், "அம்மா, நீங்கள் இருவரும் சற்றே வெளியே போயிருங்கள்" என்றான்.

"ஏன்?"

"அம்மா, டாக்டர் எனக்கு நிச்சயமாகக் கண் பார்வை வரும் என்று சொல்லவில்லை. வந்தாலும் வரலாம், வராமற் போனாலும் போகலாம் என்றுதான் சொன்னார். அதனால் நான் கண் திறக்கும்போது, பழையபடியே இருந்தால் எனக்கு எப்படியிருக்கும்!"

"எப்பொழுதும் போல் இருந்தால் இருந்து விட்டுப் போகிறாய்! அவ்வளவு தானே?" என்று மிக அலட்சியமாகக் கூறினாள் தாய்.

இதைக் கேட்டவுடன் துக்கமும் ஆத்திரமும் அவன் நெஞ்சில் பீறிட்டுக் கொண்டு கிளம்பின. "அம்மா! உனக்கு என் துக்கம், என் வேதனை கொஞ்சமும் தெரியாது. அதனாலேயே உங்களை இவ்விடத்தில் இருக்க வேண்டாம் என்கிறேன். ஆறுமாத காலம் சொல்லி முடியாத துன்பமளிக்கும் சிகிச்சைக்கு உட்பட்டு விட்டு, கடைசியில் எனக்குக் கண் பார்வை கிடைக்கவில்லை என்று நான் அறியும்போது நான் அடையப்போகும் ஏமாற்றமும் வருத்தமும் பெற்ற தாயாயினும் உன்னால் உணர முடியாது. பறவையின் இன்னொலியை மட்டும் கேட்டு நான் இதுகாறும் மகிழ்ந்திருந்தேன்; ஆனால் சென்ற ஆறுமாத காலமாக அதன் அழகையும் நேரில் கண்ணாரக் கண்டு மகிழலாம் என்று கருதி வந்தேன். அது கடைசியில் வெறும் பிரமையாக முடியும் என்று அறிந்தால் நான் படும் வேதனை எவ்வளவு என்று உன்னால் ஊகிக்க முடியாது, அம்மா! அதை உணரவேண்டும் என்றால் நீயும் ஒரு பிறவிக் குருடியாகப் பிறந்திருக்க வேண்டும். ஆகவே, இனி நீயும் தங்கச்சியும் இந்த அறையில் இருக்க வேண்டாம். வெளியே போங்கள். எனக்கு ஏற்படக் கூடிய மகிழ்ச்சியோ துக்கமோ நான் ஒருவனே முதலில் அனுபவிக்கிறேன். பிறகு உங்களைக் கூப்பிடுகிறேன், வாருங்கள். ஆம், நான் கூப்பிட்ட பின்னர்தான் வரவேண்டும். அதற்குமுன் எக்காரணத்தாலும் வரக் கூடாது—போங்கள்" என்று இரைந்தான்.

முருகேசனின் இந்த விசித்திரப் போக்கைப் பற்றிச் சரியாக உணர முடியாமல் தாயும் தங்கையும் கதவை இழுத்துச் சாத்திக் கொண்டு அவ்விடத்தை விட்டு அகன்றனர்.

★

அவன் கண்கள்மீது இருந்த களிமண் போன்ற மருந்து கொஞ்சம் கொஞ்சமாக உதிரத் தொடங்கியது. இரண்டு மணி நேரத்தில், பரிபூரணமாக உதிர்ந்து விட்டது. மெல்ல இமைகளைத் திறந்தான். அவன் கண்களில் ஒளி புகுந்தது. சுற்று வட்டாரங்களில் உள்ளவற்றையெல்லாம் அவனால் பார்க்கமுடிந்தது.

ஜன்னல் வழியாக வெளியே பார்த்தான்; பச்சை மரம் தெரிந்தது. அதில் பூத்துக்

குலுங்கிய புஷ்பங்கள் தெரிந்தன. பாடிக் களிக்கும் பறவைகள் தெரிந்தன.

அவை பாடும் ஒலியிலிருந்து, அவைதான் பறவை என்பதை ஊகித்தான்.

நறுமணத்திலிருந்து அவைதான் புஷ்பங்கள் என்பதை அறிந்தான்.

பறவைகள் மரக்கிளைகளில் தங்கும் என்று கேள்விப்பட்டிருந்ததால், மரம் என்றால் இப்படித்தான் இருக்குமோ என்று ஊகித்தான்.

இப்படி ஒவ்வொன்றாகப் பார்த்து வந்தான். அப்போது டக் டக் என்று கதவை இடிக்கும் சத்தம் கேட்டது.

"யார்?" என்று கேட்டான்.

"நான்தான்! உள்ளே வரட்டுமா?" என்று அவன் தாயார் குரல் கொடுத்தாள்.

"நீ உள்ளே வரும் சமயம் வரவில்லை. இன்னும் கொஞ்ச நேரம் பொறுத்திரு, கூப்பிடுகிறேன்" என்றான் முருகேசன்.

பிறகு அந்த அறைக்குள்ளிருந்த சாமான்களையெல்லாம் பார்த்தான். பலவற்றைப் பற்றி அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. "இது எதற்காக ஏற்பட்டது? அது ஏதாக இருக்கும்" என்று யோசித்தான். மணி போனதே தெரியவில்லை.

இப்படி யோசித்துக் கொண்டிருந்த போதே, அவன் கண்களுக்குள் இருள் பரவுவது போல் தோன்றியது. தூரத்தில் தெரிந்த மரம் மங்கலாகத் தெரிய ஆரம்பித்தது. புஷ்பங்கள் மங்கலாகத் தெரியலாயின, பறவைகளும் காணவில்லை. கொஞ்ச நேரத்தில் பக்கத்திலிருந்த பொருள்கள் கூடக் கண்ணுக்குப் புலப்படாமல் போக ஆரம்பித்தன.

இந்தச் சமயத்தில் மறுபடியும் 'டக் டக்' என்று கதவிடிக்கும் சத்தம் கேட்டது. அவனுக்கு இப்போது ஓரே எரிச்சலாக இருந்தது.

"அம்மா! வராதே! நான் கூப்பிட்ட பிறகு வந்தால் போதும்" என்று கூறினான். இப்போது அவன் குரலில் நடுக்கம் இருந்தது. இதைக் கண்டு தாயார் மனக்கிலேசமுற்றாள். எனினும் ஒன்றும் செய்ய முடியாமல் வந்த வழியே திரும்பிப் போய் விட்டாள்!

முருகேசனுக்கு இப்படி ஒவ்வொரு பொருளும் கண்ணுக்குப் புலனாகாமல், பழையபடி தன் கண்களுக்குள் இருட்டடிப்பு ஏற்படுவதைக் கண்டதும், டாக்டர் கூறியது அவன் நினைவுக்கு வந்தது. "கண் பார்வை பெற்றாலும் பெறலாம், அப்படிப் பெற்றாலும் வெகு வெகு சொற்ப காலமே நீடிக்கக் கூடியதாக இருக்கலாம்" என்ற வார்த்தைகள் நினைவுக்கு வந்தன!

அவனுக்குண்டான வேதனை சொல்லி முடியாது. பைத்தியம் பிடித்துவிடும் போலாகி விட்டது. தலைகிறு கிறு என்று சுழன்றது. மூச்சுத் திணறுவதுபோல் தோன்றியது. படுக்கையில் இருப்புக் கொள்ளவில்லை. எழுந்தான், ஒரே இருட்டு. நடக்க முயன்றான்; காலில் ஏதோ இடறியது. அவ்வளவுதான். தலை சுற்றி "அம்மா!" என்று அலறிக் கொண்டே தடால் என்று கீழே விழுந்தான்.

அவன் அலறிய சத்தமும் கீழே விழுந்த சத்தமும் கேட்டதும் "ஐயோ மகனே!" என்று அலறிப் புடைத்துக் கொண்டு அவன் அறைக்குள் வந்தாள் தாயார்.

மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்து கிடந்த மகனை மடியில் எடுத்து வைத்துக் கொண்டாள். சற்று நேரம் விசிறினாள்.

முருகேசன் தான் வான வீதியில் எங்கோ நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் போவது போல் உணர்ந்தான். சந்திர மண்டலம் வந்தது. அதைக் கடந்தான். நட்சத்திர மண்டலம் மினுக் மினுக்கென்று மின்னிக்கொண்டு வரவேற்றது. அதையும் வேகமாகக் கடந்தான். இப்படிப் பல மண்டலங்களைக் கடந்து சுவர்க்க லோகத்துக்கு வந்தான். மெள்ளக் கண்களைத் திறந்தான். தன்னை அன்புடன் யாரோ நோக்குவது போல் தெரிந்தது. அந்த முகத்தில் தெரிந்த கனிவு, தன் தாயின் குரலில் கேட்ட கனிவுக்கு இணையாக இருந்தது. அப்போது அவனுக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. அடுத்த கணம் 'அப்பா, முருகேசா!' என்று அந்த முகம் தன் இதழ்களை அசைத்துக் கூறியது. அவ்வளவுதான். அவனுக்குச் சந்தேகம் தெளிந்து விட்டது. பரிபூரணமாகத் தெரிந்து விட்டது. அப்போது அவன் உள்ளத்தில் எழுந்த ஆனந்தத்துக்கு அளவில்லை.

"அம்மா! உலகத்தில்தான் உன்னைக் கண்ணாரப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. கடவுள் சுவர்க்கத்திலேயாகிலும் உன் முகத்தைப் பார்க்க அருளினாரே, அவருக்கு என் மனப்பூர்வமான நன்றி" என்றான்.

"முருகேசா! நாம் சுவர்க்கத்திலேயும் இல்லை, நரகத்திலேயும் இல்லை. இந்த உலகத்தில்தான் இருக்கிறோம்! என்முகம் உனக்குத் தெரிகிறதா அப்பா?" என்று கேட்டாள் தாயார்.

"ஒருமாதிரி மங்கலாகத் தெரிகிறது, அம்மா! சற்றுமுன் எல்லாம் பளிச்சென்று தெரிந்தன. பிறகு எல்லாம் மங்கலாகத் தெரிய ஆரம்பித்து, அப்புறம் ஒன்றுமே புலப்படாமல் போய் விட்டது......"

"அதற்குத்தான் இருள் என்று பெயர், உலகத்தில் பகல் முடிந்து இரவு வருகிறது என்று அர்த்தம். இருளில் உனக்கு ஒன்றும் தெரியாது. அவ்வளவு தான். ஆனால் உனக்கோ கண் பார்வை வந்து விட்டது! இந்த உலகத்திலேயே உனக்குக் கண் பார்வை வந்து விட்டது!" என்றான் அங்கிருந்த அவன் நண்பன் கனகசபை.

நண்பன் சொல்லியதைக் கேட்டதும் அவனுக்கு மூர்ச்சை போட்டிருந்தது நன்றாகத் தெளிந்து விட்டது. கண்களை நன்றாகக் கசக்கி விட்டுக்கொண்டு பார்த்தான். அவன் தங்கை கையில் கொண்டு வந்த ஹரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் எல்லாப் பொருள்களும் தெளிவாகத் தெரிந்தன.



பைல் பீன்ஸ்
மலச்சிக்கலையும் அசதியையும்
போக்குகிறது.

மலச்சிக்கல், வயற்றுக்கோளாறு, மற்றும் உங்கள் உடலை வாட்டி வதைத்து சக்தியை இழக்கச்செய்யும் நோய்களைத் தடுக்கிறது. டாக்டர்கள் பரீக்ஷை செய்து அங்கீகரிக்கும் பைல் பீன்ஸை இன்று முதல் கிரமமாக உபயோகித்து கட்டுதிட்டமாகவும், ஆரோக்கியமாகவும், வாலிபத்தோற்றத்தோடும் இருக்க முயலுங்கள்.




வாழ்க்கையை இன்பமாகக் கழியுங்கள்-டாக்டர்கள் அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸை உட்கொள்ளுங்கள்.

# பைல் பீன்ஸ்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மதராஸிற்கு சோல் ஏஜன்டுகள்: நாதா & கோ., பார்க்டவுன்



புத்தம் புதியதும் சிறந்ததுமான இந்த மூன்று சக்கரம் சைகிள்களுக்கு (Try-Cycle) ஆர்டர் செய்யுங்கள். இதன் விலை ரூ. 25/- லிருந்து ரூ. 15/-க்கு குறைக்கப் பட்டிருக்கிறது. ரயில்வே சார்ஜ் சுமார் ரூ. 1/8/- உங்கள் அருகாமையிலுள்ள ரயில்வே ஸ்டேஷன் பெயரைத் தெரிவித்து இன்றே ஆர்டரை அனுப்புங்கள்.

**JUPITER TRADING CO.,**
**P. BAG 16602 - CALCUTTA - 4**

**மூன்று கடிகார ஆர்டருக்கு ஒன்று இனாம்!**

உயர் ரக லீவர் வாட்சுகள், ஸ்விஸ் தயாரிப்பு. 5 வருஷ உத்தரவாதம். இதுவரை இக் குறைந்த விலைக்குக் கொடுத்ததில்லை. ஸ்டாக்குகள் சொற்பமே உள்ளன.

**இலவசம்** மூன்று வாட்சுகள் ஆர்டருக்கு ஒரு கைக்கெடிகாரமும் இரண்டுக்கு ஒரு கோல்டு கேப் பவுண்டன் பேனாவும் ஒரு கடிகாரத்துக்கு ஒரு ஷீபர்ஸ் டிசைன் பவுண்டன் பேனாவும் இனாம். மேலும் ஒரு வெல்வெட் பெட்டியும் அழகான ஸ்ட்ராப்பும் இனாம்.

டி.ந.1.  சைஸ் 6½"

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் ஸ்டீல்பேக் கேஸ் | ரூ. 38/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 40/- |

டி.ந.2.  சைஸ் 6½"

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் ஸ்டீல்பேக் | ரூ. 38/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 40/- |

டி.ந.3.  சைஸ் 10½"

வாட்டர் ப்ரூப்

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் | ரூ. 48/- |
| 15 | ஜுவல்ஸ் க்ரோம் உயர் ரகம் | ரூ. 52/- |
| 17 | ஜுவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் | ரூ. 55/- |

டி.ந.4.  சைஸ் 8½"

| | | |
|---|---|---|
| 5 | ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 32/- |
| 15 | ஜுவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் | ரூ. 38/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 40/- |

டி.ந.5.  சைஸ் 10½"

| | | |
|---|---|---|
| 13 | சைஸ் க்ரோம் கேஸ் | ரூ. 19/- |
| 5 | ஜுவல்ஸ் மீராஜ் ரோல்டுகோல்டு | ரூ. 25/- |
| 15 | ஜுவல்ஸ் க்ரோம் ஸ்டீல்பேக் | ரூ. 38/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டுகோல்டு | ரூ. 40/- |



| | |
|---|---|
| இங்கிலீஷ் அலாரம் டைம்பீஸ் | ரூ. 19/- |
| இங்கிலீஷ் அலாரம் உயர் ரகம் | ரூ. 21/- |
| ரயில்வே ரெகுலேட்டர் பாக்கெட்வாட்ச் | ரூ. 13/- |

**PIONEER WATCH COMPANY**
**Post Box No. 11428, CALCUTTA-6**

# அருவிக்கரை ஆசிரமம்



'சுதர்சன்'

மொழிபெயர்ப்பு: ரா.வீ.

## 13. உயிர்ப் போர்

சகோதரா! படகோட்டி எப்படியோ தன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு கரையேறி விட்டான். ஆனால் நாங்களோ மரணத்தின் வாயில் மாட்டிக் கொண்டிருந்தோம். ஆயினும் நான் துணிவு இழக்கவில்லை. நான் கடலில் குமுறி யெழும் பேரலைகளுடன் பயங்கரமாகப் போர் புரியலானேன். எனக்கு அப்பொழுது என்னைப் பற்றிக் கூட அவ்வளவாகக் கவலை உண்டாகவில்லை. எப்படியாவது தேவகி உயிர் பிழைத்து விட்டால் போதும் என்றுதான் இருந்தது. அவளும் அவளுடைய கணவனும் எனக்குச் செய்திருந்த உபகாரங்கள் எல்லாம் என் கண் முன்னே வந்து நின்றன. நான் கை கால்களை உதைத்துக் கொண்டு உயிர் வாழ முயன்றேன். என் கண்கள் கடலின் நீர்ப் பரப்பிலே தேவகியைத் தேடுவதில் முனைந்தன. ஆனால் தேவகியை எங்குமே காணவில்லை. நான் நாற்புறமும் சுற்றிச் சுற்றிப் பார்த்தேன். கண்களுக்கெட்டிய தூரம் வரை பார்வையைச் செலுத்திப் பார்த்தேன். ஆனால் அவள் எங்கேயாவது அகப்பட்டால்தானே? நான் தேவகியைத் தேடித் தேடிப் பார்த்து விட்டுக் கடைசியாக நம்பிக்கை இழந்து விட்டேன். நான் நம்பிக்கை இழந்து சோர்ந்து போன அந்தச் சமயத்தில்தான் திடீரென்று ஒரு பொருள் என்னை நோக்கி வருவது போலத் தோன்றியது. நான் விழி பிதுங்க வியப்புடன் பார்த்தேன். எனக்கு அப்பொழுது ஏற்பட்ட ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. கரை காண இயலாத கடலைப் போலவே என் களிப்பும் விரிந்து விட்டது. ஏனெனில் என்னை நோக்கி மிதந்து வந்த பொருள் தேவகிதான். நானும் ஒரே தாவாகத் தாவி அவளருகே சென்றேன். அவளை ஒரு கையினால் பிடித்துக் கொண்டு இன்னொரு கையினால் நீரைக் கிழித்துக் கொண்டு கரையை நோக்கி நீந்தலானேன்.

ஆனால் கரையை அடைந்து விடுவது என்பது அவ்வளவு சுலபமான காரியமா? கொஞ்ச தூரம் வருவதற் குள்ளாகவே எனக்கு மூச்சு முட்டத் தொடங்கி விட்டது. ஆழ்ந்த நீலத் திரைச் கடலைக் கண்டு என் இருதயம் இடிந்து போய் உட்கார்ந்து விட்டது. ஆனால் தேவகியின் நினைவு என் உள்ளத்துக்குத் துணிவை அளித்தது. 'முயற்சி திருவினையாக்கும். முன்னேறு!' என்று தட்டிக்கொடுத்தது. வாழ்வும் சாவும் என்னெதிரே நின்று 'வா, வா!' என்று போட்டி போட்டுக் கொண்டு என்னைக் கூவி அழைத்துக் கொண்டிருந்தன. நான் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு கைகளையும் கால்களையும் உதைத்து நீந்திக் கொண்டிருந்தேன். என் முயற்சிகள் ஒரு பொழுதும் வெற்றி அடையாது என்றே எனக்குத் தோன்றிற்று. ஆயினும் மனிதனுக்கு உயிர் ஒரு வெல்லம் அல்லவா? ஆகவே, நான் முயற்சியைக் கைவிடவில்லை. 'நம்மால் ஆன முயற்சியைக் கடைசி வரை செய்து பார்த்து விடுவோம். நடப்பது நடக்கட்டும்' என்று கரைப் பக்கம் முன்னேற முயற்சித்துக் கொண்டிருந்தேன். இச் சமயம் தான் திடீரென்று கரை கண்களுக்கு வெகு அருகில் தென்படுவதைக் கண்டேன். உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருந்த உடலில் மறுபடியும் புத்துணர்ச்சி எழுந்தது. உள்ளத்தினிடமிருந்து விடை பெற்றுக் கொண்டிருந்த துணிவும் தைரியமும் மறுபடியும் உள்ளத்தை அடைக்கலம் அடைந்தன. நான் உடல், உயிர் இவ் விரண்டின் முழுத்திறனையும் முழு மூச்சுடன் ஒன்று கூட்டிக் கரை காணும் முயற்சியில் ஈடுபட்டேன். கடைசியில் எப்படியோ தேவகியைத் தூக்கிக் கொண்டு கரையும் சேர்ந்து விட்டேன்.

சகோதரா! நாங்கள் மரணத்தின் வாயிலிருந்து தப்பி விட்டோம். ஆனால் அப்பொழுது அசுர வேகத்தில் வீசிக் கொண்டிருந்த புயலின் வாயிலிருந்து தப்ப முடியவில்லை. கஷ்டங்கள் தனித்து வருவதில்லை. ஒன்று சேர்ந்தே வருகின்றன என்பது எவ்வளவு உண்மை! நான் தங்கும் இடம் தேடி அலையலானேன். தேவகியை இரு கைகளிலும் தூக்கிய வண்ணம் நான் நாற்புறமும் சுற்றிச் சுற்றி ஓடினேன். பாரம் தாங்காமல் கைகள் கடுத்துவிட்டன. கால்கள் கெஞ்சின. என்னால் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. இருந்தாலும் என் சக்தி

களையெல்லாம் ஒன்று கூட்டி நடந்து கொண்டுதான் இருந்தேன். இது வீர தீர பராக்கிரமத்தைப் பரிசீலிக்கும் போர் அல்லவே! வாழ்க்கைப் போர் அல்லவா? வீர தீர பராக்கிரமத்தைப் பரிசோதிக்கும் போரில் சிரமமாக இருந்தால் 'வேண்டாம், இந்த வெற்றி!' என்று விட்டு விட்டாலும் பாதகமில்லை. ஆனால் 'வாழ்வதா, சாவதா?' என்று நடந்து கொண்டிருக்கும் உயிர்ப் போரில் சும்மா கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்க முடியுமா? கடைசிவரை போரிட்டுப் பார்த்துத்தானே ஆகவேண்டும்? ஆகவே, உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு, தங்கும் இடம் எங்கேயாவது கிடைத்து விடக்கூடாதா என்ற நம்பிக்கையில் நடந்து கொண்டிருந்தேன். என் நம்பிக்கை நல்லவேளையாக வீண்போகவில்லை. கடைசியில் எனக்கு ஒரு பழைய காலத்துக் குடிசை கிடைத்து விட்டது. நான் அதற்குள் நுழைந்தேன். அந்தக் குடிசையின் சுவர்கள் பல இடங்களில் இடிந்திருந்தன. தரையின் தளவரிசை பல இடங்களில் பெயர்ந்திருந்தது. ஆயினும் அந்தப் பயங்கரப் பெரு மழையிலும் காற்றிலும் அந்தக் குடிசை எனக்கு அரண்மனைக்கு ஒப்பாகவே தோன்றியது. ஒரு புறத்தில் புற்கள் குவித்து வைக்கப்பட்டிருந்தன. நான் அவற்

ளுடைய மூர்ச்சையுற்ற உடலை அந்தப் படுக்கையில் கிடத்தினேன்.

அப்பொழுதும் நல்ல மழை பெய்துகொண்டிருந்தது. நான் அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் வெளியே கிளம்பினேன். எப்படியோ தட்டுத் தடுமாறிக் கொண்டு பக்கத்தில் உள்ள ஒரு கிராமத்தை அடைந்தேன். அங்கிருந்து கொஞ்சம் பாலும் சில ரொட்டிகளும் வாங்கிக் கொண்டேன். கரி மூட்டைக்கும் கம்பளிக்கும் பணம் கொடுத்து வந்தேன். கூலியாட்கள் அந்தப் பொருள்களைக்கொண்டு வந்து குடிசையில் சேர்த்தார்கள். அப்புறம் அந்தக் குடிசை ஒரு குடியானவனின் வீடு போல் ஆகிவிட்டது. நான் சீக்கிரமாகத் தேத் தண்ணீர் தயாரித்து விட்டுத் தேவகியைத் தூக்கி உட்கார வைத்தேன். தேத் தண்ணீர் அருந்தியபின்தான் அவள் நல்ல சுய உணர்வு பெற்றாள்.

ஆனால் இதென்ன? இவள் முகம் இப்படி ஏகமாக வெளுத்துப் போவானேன்? அட, கண்களிலிருந்து வேறு நீர் மழையாகப் பெய்கிறதே, ஏன்? எனக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. பிறகுதான் அவள் எப்படியாவது புறப்பட்டு ரூப்சந்திடம் போய்ச் சேர்ந்து விட்டால் போதும் என்று விருப்பம்

"இனி எதற்குக் கவலைப் படப் போகிறார்? நீங்கள் தான் சீக்கிரமே அவரிடம் போய்ச் சேர்த்து விடப் போகிறீர்களே!" என்றேன்.

"அது சரி, அவரிடம் சொல்லிக் கொள்ளாமல் வந்து விட்டேனே! நாலு பேர் நகைப்புக்கு இடமாகி விடக்கூடாதே என்றுதான் கவலையாக இருக்கிறது!" என்றாள் தேவகி.

இதற்கு நான் ஒன்றும் பதில் பேசவில்லை. 'ரூப்சந்துக்கு ஏதாவது சந்தேகம் ஏற்பட்டு விடுமோ?' என்று நான் என்மனத்துள் சிந்திக்கலானேன்.

தேவகி என்னுடன் மூன்று நாட்கள் இருந்திருக்கிறாள். அதுவும் தனியாக நகரத்துச் சூழ்நிலையைத் தாண்டி வெகு தொலையில் ஒரு குடிசையில் இருந்திருக்கிறாள். இம்மாதிரி நிலையில் சந்தேகம் ஏற்பட்டால், அதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. சந்தேகம் ஏற்படா விட்டால்தான் ஆச்சரியம்.

இதை எண்ணியதும், 'ரூப் சந்தின் உள்ளத்தில் கடுகளவு சந்தேகம் ஏற்பட்டால் கூட அது தேவகியின் வாழ்க்





"ஏன் ஸார், உங்கள் பையன் படித்துக் கொண்டே போகிறானே, படிப்பு முடிந்ததும் என்ன ஆகப் போகிறான்?"

"கிழவனாகப் போகிறான்!"

தேவகி சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தாள். பிறகு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு விட்டு, "ஆனால் நான் அப்படி எண்ணவில்லை. அவருக்கு என்னை நன்றாகத் தெரியும். என்மீது அவருக்கு அளவற்ற நம்பிக்கை உண்டு. ஆகவே, அவருக்கு என்மீது அவநம்பிக்கை ஏற்படுவதற்கே காரணம் இல்லை!" என்றாள்.

அதைக் கேட்ட பிறகு என் உள்ளத்தில் எழுந்த கலவரம் அடங்கியது. தேவகியின் அந்தச் சொற்களில் நம்பிக்கை விழவே, என் மனமும் நிம்மதியுற்றது. கவலை குறைந்த நான், "அப்படியானால் சரி, நடந்ததை நடந்தபடி சொல்லி விடுங்கள்!" என்றேன்.

சகோதரா! வேடிக்கையைப் பார்! அவள் சொல்லைக் கேட்ட எனக்கு நம்பிக்கை பிறந்தது. ஆனால் என் சொல்லைக் கேட்டதும் அவளுக்கு அவநம்பிக்கை பிறந்து விட்டது. ஆகவே, அவள் யோசித்தவாறு தட்டுத் தடுமாறும் குரலில், "ஒரு வேளை அவருக்கு நம்பிக்கை ஏற்படா விட்டால்...?" என்றாள்.

நான் சிறிது நேரம் என் மூளையைப் போட்டுக் குழப்பிக் கொண்டு யோசனையில் ஆழ்ந்தேன். பிறகு, "எனக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது. சொல்லலாம் என்றால் சொல்லுகிறேன்!" என்றேன்.

"அதாவது, அவரிடம் நான் ஏதாவது ஒரு பொய் சொல்ல வேண்டும் என்று சொல்லப் போகிறீர்கள்! அப்படித்தானே?" என்று கேட்டாள் தேவகி.

"ஆமாம், இது சம்பந்தமாக நீங்கள் ஒரு சின்னப் பொய் சொல்லத்தான் வேண்டியிருக்கும்" என்றேன்.

"அந்தப் பொய் சொல்லுவதை விட எதையாவது தின்று இந்தப் பாழும் உயிரை மாய்த்துக் கொண்டு விடலாம் என்று தோன்றுகிறது. பொய் சொல்லி விட்டு அவரெதிரே தலை நிமிர்ந்து நிற்கவா? அது என்னால் ஆகாத காரியம்........." என்று சொன்னவள் அதற்கு மேல் ஒன்றும் பேசாமல் புத்தி பேதலித்தவள் போல் பார்க்கலானாள். அவளுடைய அந்தப் பார்வையிலிருந்து, அவள் மனத்தில் இல்லாத எண்ணங்கள் எல்லாம் ஓடிக் கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றியது. சிறிது நேரம் கழித்து அவள், "ஆமாம், நீங்கள் அவரிடம் என்ன சொல்லலாம் என்று அபிப்பிராயப் படுகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"நான் என் தோழி மைத்ரேயின் நானியைப் பார்ப்பதற்காக அவள் வீட்டு வரைக்கும் போயிருந்தேன். தெய்வ வசமாக மழையும் புயலும் பிடித்துக் கொண்டு விடவே, வெளியே தலை நீட்டவே முடியவில்லை. ஆகவே, மூன்று நாட்களும் அங்கேயே தங்கும்படி ஆகி விட்டது. இன்று மழை கொஞ்சம் நின்றதும் புறப்பட்டு வந்தேன் என்று சொல்லுங்களேன்!" என்றேன்.

தேவகியின் முகபாவத்திலிருந்து அவள் பொய் பேசத் தயாராக இல்லை என்பது நன்றாகத் தெரிந்தது. அவளோ பாரதநாட்டின் சிரத்தையே உருவான பெண். கணவனைக் கடவுளாக, ஏன்? கடவுளைக் காட்டிலும் ஒரு படி மேலாகப் பூஜிக்கும் பண்பு தோய்ந்தவள். இதுவரை அவள் கணவனிடம், கணவனிடம் மட்டும் அல்ல, யாரிடமுமே பொய் என்ற வார்த்தையையே பேசி அறியாதவள். பொய் சொல்லுவது மகா பாவம் என்று எண்ணுபவள். நிரத்தெளிந்து ஒரு பொய் சொல்லுவது என்றால் அவள் மனம் ஒப்புமா? அவள் வாழ்க்கையில் இதுவரை பொய் சொல்ல வேண்டிய அவசியமே, இக்கட்டான நிலைமையே ஏற்பட்டதில்லை. ஆகவே, அவளுடைய மனக் குதிரை பழக்கப்படாத குதிரையைப் போல் இடக்குப் பண்ணத் தொடங்கி விட்டது. சிறிது நேரம் அவளுடைய உள்ளத்திலே 'பொய் சொல்வதா, வேண்டாமா?' என்னும் விஷயத்தில் தேவாசுரப் போர் மூண்டது. அந்தப் போரில் கடைசியில் அரக்கர்களுக்குத் தான் வெற்றி கிடைத்தது. தேவகி என் யுக்தியை ஒப்புக் கொண்டு விட்டாள். தன் வீட்டை அடைந்ததும் வண்டியிலிருந்து இறங்கிக் கொண்டாள். நானும் என் ஹோட்டலுக்குச் சென்றேன்.

'இப்படி எதிர்பாராத விதமான தவறு நிகழ்ந்து விட்டதே! முடிவு கெடுதலாக முடியாமல் இருக்க வேண்டுமே! கெடுதலான முடிவு ஏற்பட்டு விட்டால் என்ன ஆகும்?' என்று என் மனம் இல்லாத வேதனையெல்லாம் பட்டுக்கொண்டிருந்தது.

'இதென்ன இரஹஸ்யம்? கடவுளே! இந்த இசைகேடான நிலையிலிருந்து நீதான் காப்பாற்ற வேண்டும்!' என்று பாரதப் பண்புடன் வேண்டுவதைத் தவிர எனக்கு வேறு வழி எதுவும் தோன்றவில்லை. (தொடரும்)



# அகழிப் பாலம்

டி. ஆர். குருஸ்வாமி



"திருச்சியில் சுரங்கம் கண்டு பிடிக்கப் பட்டது" என்று பத்திரிகைகளி லெல்லாம் பெரிய எழுத்தில் போட்டிருந்தார்கள். ஊரே திரண்டு சுரங்கத்தைப் பார்க்கப் போய்க் கொண் டிருந்தது. இத்தனை அமளி துமளிப் படும் விஷயத்தை, திருச்சியிலிருந்து பார்க் காம விருப்ப தென்றால்...? ஆகவே, வாசு அதைப் பார்த்து வரப் புறப்பட்டான்.

மாலை ஆறு மணி ஆகும்போது அவன் மெயின் கார்டு கேட்டை அடைந்தான். அதை அடுத்துத்தான் அந்தச் சுரங்கம் இருந்தது. தெப்பக்குளம் தபாலாபீஸை ஒட்டி 'பாதா ளச் சாக்கடை'யைக் கொண்டு வருவதற்காக நகர சபையார் செய்திருந்த பகீரத முயற்சி யில் தட்டுப்பட்டதுதான் அந்தச் சுரங்கம்.

தெப்பக்குளம் தபாலாபீஸுக்கு எதிரே ஒரு வளைவு. அதை யடுத்து 'மெயின் கார்ட் கேட்'டாகிய மேலக் கோட்டை வாசலை நோக்கி மற்றும் இரு வளைவுகள் குறுக்கிட் டன. லட்சோப லட்சம் ஜனங்கள் கூடிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சில தைரிய சாலிகள் கையில் மெழுகுவர்த்தி, டார்ச் லைட் முதலிய உபகரணங்களுடன் குழியில் இறங்கி வளைவுக்குள் போய் வந்து கொண்டிருந் தார்கள். பிரதம சாலையை அடுத்திருந்த ஒரு வளைவில் எங்கிருந்தோ ஒரு பாதாள வாய்க்கால் தெள்ளிய நீரோடு ஓடிக்கொண் டிருந்தது.

இவற்றைப் பார்த்தவர்களின் கற்பனையும் பற்பல விதமாக விரிந்து கொண்டிருந்தது.

"இது தஞ்சாவூருக்குப் போகிற சுரங்க மாக்கும்!" என்றான் ஒருவன்.

"சுரங்கத்திலே போகிறவர்களுக்குத் தண் ணீர்த் தாகம் எடுத்தால் என்ன பண்ணு கிறது? அதற்காகத்தான் தண்ணீரும் ஓடு கிறது!" என்றான் இன்னொருவன்.

"பாலம் மாதிரியல்லவா தோன்றுகிறது!"

"இல்லே, அப்பேன்! தாயுமானசாமி மலை யிலே அம்மன் கோவிலுக்கு எதிரில் இருக்கிற தல்லவா ஒரு சுரங்கம், அதுதான் இப்படி வருகிறதாம்!"

"சரி, அப்படியானால் இந்த மூன்று வழி எதற்கு?"

"அதுவா? ஒன்று தஞ்சாவூருக்கு. இன் னொன்று உறையூர் ராஜா ரகசியமாக வந்து சாமி பார்ப்பதற்கு. மூன்றாவது கோட்டை யிலே யிருந்து ஆபத்துக் காலத்தில் தப்பி ஓடுவதற்கு!"

இவ்வாறு ஜன சக்தியின் நிர்மானம் விரிந்து கொண் டிருந்தது. வாசுவுக்கு என்னவோ அது ஒரு பாலமாகத்தான் இருக்க வேண்டும்

என்று தோன்றியது. 'உள்ளே நுழைந்து பார்ப்போமே!' என்று எண்ணி அவன் இறங்க முயன்றபோது, "வாசு!" என்ற இனிய குரல் அவனை அழைத்தது. அவன் மனம் இருந்த சரித்திர கால நிலையில் அந்தக் குரல் ஒரு பிரமையை உண்டாக்கியது. சுற்று முற்றும் பார்த்தான். கும்பலிலிருந்து ராதா வந்து கொண்டிருந்தாள்.

"ஏன், நீயும் பார்க்க வருகிறாயா?"

"நான் மட்டும் தனியாக வந்தேன். துணைக்கு யாருமில்லையே என்று எண்ணும் போது நீங்கள்..."

வாக்கியத்தை முடிக்காமலேயே, ராதாவும் குழிக்குள் இறங்கி விட்டாள். தபாலாபீஸுக்கு எதிரிலிருந்த வளைவுதான் ஒரு பத்து கஜம் வரையில் நீண்டது. உள்ளே இருட்டு. வாசு கொண்டு வந்திருந்த டார்ச்சு ஒளியுண்டாக்க இருவரும் உள்ளே நுழைந்தனர். அப்பா! ஒரே புழுக்கம். வெப்பம் வேறு. இன்னும் கும்பல் வேறு ஆர்வமுடன் உள்ளேயும் வெளியேயும் போய் வந்து கொண்டிருந்ததால் ராதா, வாசு இருவருக்குமிடையே இருந்த இடைவெளி குறுகியது. ஒட்டியும் ஒட்டாமலும் உள்ளே சென்றனர்.



உள்ளே முழுவதும் நல்ல முறையில் இருந்த காறைப் பூச்சுத் தட்டுப்பட்டது.

'கட கட கட கட' என்று ஒரு இடி சத்தம் கேட்டது. வாஸுவுக்கு, அது மேலே ஓடும் லாரி என்று தெரிந்தாலும் ராதா பயந்து விட்டாள். அவள் உரக்கக் கத்திக்கூட இருப்பாள். ஆனால் வாசு துணையிருக்கும் பொழுது பயப்படுவதாவது என்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டாள்.

ராதாவும் வாசுவும் ஒரே தெருவில் வசித்து வந்தார்கள். ஆகவே, அடிக்கடி சந்திக்கும் வாய்ப்பு அவர்களுக்குக் கிட்டி வந்தது. ஆனால் உள்ளத்து ஆசை தீரப் பேசிப் பழகவேண்டும் என்ற ஆசையிருந்தும், அதற்கு வாய்ப்புக் கிட்டாமலே இருந்து வந்தது.

அன்று திடீரென்று இந்த வாய்ப்பு ஏற்படுத்தி வைத்ததற்கு அந்தப் புதையுண்ட பாலத்திற்கு வாசு மனமார நன்றி செலுத்தினான். ராதாவும் என்ன நன்றியில்லாதவளா? அவளும் அந்தப் பாலத்தை வாயார வாழ்த்தினாள். இருவரும் தம்மை மறந்து ஆனந்தத்தில் மூழ்கி விட்டடை அடைந்தனர்.

• • •

அன்று இரவு மீண்டும் வாசு அந்தச் சுரங்கத்தின் வழியே போக நேர்ந்தபோது, பாலம் முழுவதையும் தோண்டியிருந்தார்கள். கோட்டை வாசலிலிருந்து பாலம் தொடங்கியிருந்தது. வானத்தில் நிலா காய்ந்து கொண்டிருக்கவே, அந்தப் பாலம் மிகவும் எடுப்பாகக் காட்சி அளித்தது.

பாலத்தின் வழியே ஓடிக் கொண்டிருந்த மாயச் சிற்றாற்றின் கரையிலே ஒரு பெண் மட்டும் உட்கார்ந்திருந்தாள். அதைக் கண்டு திடுக்கிட்ட வாசு அருகே சென்று பார்த்தான். ராதாவாக இருக்கவே அவனுக்கு ஏற்பட்ட வியப்புக்கு ஓர் எல்லையில்லை. ஆனால் அவளுடைய உடை ஏன் இப்படியிருக்கிறது? யாரோ ஒரு பட்டிக்காட்டுப் பெண்ணைப் போல் அல்லவா அவள் உடையணிந்து கொண்டிருந்தாள்!

'நம்மைப் போலவே ஒருவேளை இவளும் இங்கே வந்திருக்கலாம் அல்லவா?' என்று எண்ணிய வாசு, "இங்கே எங்கே வந்தாய், ராதா?" என்று கேட்டான்.

அண்ணாந்து பார்த்த அவள் "யார் நீங்கள்? நான் ராதா இல்லை. சீதா!" என்றாள்.

"என்மேல் கோபமா?"

"உங்களிடம் எனக்கு என்ன கோபம்? என்னைப் படைத்த கடவுள் அப்படிச் செய்து விட்டார்!" என்று சொல்லி அழ ஆரம்பித்து விட்டாள் அந்தப் பெண்.

"சும்மா அழக்கூடாது. விஷயம் என்னவென்று சொல்" என்றான் வாசு.

"விஷயம் என்னவாவது? அது ஒரு பெரிய கதை!" என்றாள் அவள்.

"அதைத்தான் சொல்லேன்!" என்று சொல்லி உட்கார்ந்து கொண்டான் வாசு. அவள் சொல்ல ஆரம்பித்தாள்.

"நான் அவரைக் காதலித்தேன். உண்மையாக, மனப்பூர்வமாக! அவர் காதலைப் பெற வேண்டி உறையூரிலிருந்து தினமும் ஓடி ஓடி



வந்தவர் :—நீங்கள் ஜோஸ்யம் பார்த்து நல்ல காலம் வரப்போகிறது என்று சொன்னீர்களே, அவர் கொஞ்ச நாள் முந்தி இறந்து போய்விட்டார்!

ஜோஸ்யர் :—அடாடா! இனிமேல்தான் அவருக்கு நல்ல தசை! அதற்குள்ளே அந்த மனுஷன் போய்விட்டாரே, சார்!

---

வருவேன். இதே கோட்டை வாசலில் தான் அவர் காவல் புரிந்தவாறு நின்று கொண்டிருப்பார். என்னைக் கண்டவுடன் ஓடோடியும் வருவார். அதன் பின்னர் நாங்கள் எத்தனை எத்தனையோ பேசுவோம். என்ன என்னவோ நேரம் போவது தெரியாமல் பேசிக் கொண்டேயிருப்போம்.

அப்படியிருக்கையில் என் தகப்பனார் என்னை யாரோ ஒருவனுக்கு மணம் முடிக்க எண்ணினார். அவரிடம் அதைச் சொல்லி விட்டுப் போக நான் நள்ளிரவு நேரத்தில் வந்த போதுதான் அந்தச் சம்பவம் நடந்தது. நான் அவருடன் இங்கே உட்கார்ந்து செய்தியைச் சொன்னதும் அவர் இடி விழுந்தவர் போல் ஆனார். அந்த நினைவுச் சுழலில் சிக்கித் தன் கடமையை மறந்து நின்றபோது சமயம் பார்த்துக் கொண்டிருந்த எதிரி நாட்டு ஒற்றர்கள் கோட்டை வாயிலைக் கடந்து உள்ளே போய் விட்டார்கள் போலிருக்கிறது. உள்ளே சங்கேத நகரா ஒலித்தது. சரேலெனத் துள்ளியெழுந்தார் அவர். கோட்டை வாசலில் போய் நின்று கொண்டார். உள்ளேயிருந்து வீரர்கள் துரத்தவே ஒற்றர்கள் வெளியே ஓடி வந்தனர். அவர்களைத் தனித்து எதிர்த்தார் இவர். எத்தனை நேரம் தனியாக எதிர்ப்பது? ஐயோ! அதைச் சொல்லவும் என் நாக் கூசுகிறது. யாரோ ஒரு ஒற்றன் அவரைக் குத்தி விட்டான். அவருடைய உடல் இங்கேதான் விழுந்தது. அதைக் கண்டவுடன் என் மனம் என் நிலையில் இல்லை. உணர்ச்சி வேகத்தில் என்னென்னவோ செய்தேன். அதன் பிறகு எனக்கு எங்கும் போகப் பிடிக்கவில்லை. இங்கேயே உட்கார்ந்திருக்கிறேன்!'' என்றாள் அவள்.

அதைக் கேட்ட வாசுவுக்கு அடக்கமாட்டாத சிரிப்பு தானாகவே வந்தது.

''நல்ல கற்பனை இது, ராதா! சரித்திர ஆராய்ச்சி பலமாக இருக்கிறதே!'' என்றான்.

''என்ன? சரித்திர ஆராய்ச்சியா? இதோ உறையூரில் அரசாட்சி செய்கிறாரே, அந்தப் பார்த்திப சோழனைக் கேட்டுப் பாருங்கள்! உண்மை தெரியும்!'' என்றாள். அப்போது தான் வாசுவுக்கு, 'சரிதான்! நாம் ஏதோ சரித்திர காலப் பேயினிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டோம்' என்று தோன்றியது. உடனே, ''ஐயோ! ஐயோ!'' என்று அவன் உரக்கக் கத்தியே விட்டான்.

''என்னடா, உளறுகிறாய்?'' என்று சொல்லி வாசுவைக் கனவு உலகத்திலிருந்து விடுவித்தாள் அவன் அன்னை. அப்பொழுது மலைக்கோட்டை மணி காலை ஆறுமணி ஆகி விட்டது என்பதை அறிவித்தது.

முதல் நாளைய இனிய அநுபவமும், கனவின் பயமும் மட்டும் போதாதென்று அவனுக்கு அன்றைக்கே வேறொரு அதிர்ச்சி தரும் செய்தியும் காத்திருந்தது

அன்று மத்தியானம் வாசுவின் வீடு தேடிக் கொண்டு வந்த ராதாவின் தகப்பனார் அவன் தாயாரிடம் கல்யாண விஷயமாகப் பேச்சைத் துவக்கினார்.

''இத்தனை நாட்களாகவே எங்களுக்கு அவளை வாசுவுக்குக் கொடுத்துவிட வேண்டும் என்று எண்ணம் உண்டு. ஆனால் ராதா இதுவரை ஏதும் பிடி கொடுத்துச் சொல்லவில்லை. இன்று காலையில் அவளாகவே முன் வந்து, 'சீக்கிரம் செய்துவிட வேண்டும்' என்று துடிக்கிறாள். என்னவோ போங்கள்! இந்த காலத்துப் பெண்களின் விசித்திர சுபாவம் புரியவேயில்லை'' என்றார்.

வாசுவுக்கு அது அமிர்தம்போல் பட்டது.

''அது சரிதான். அவன் என்ன சொல்லுகிறானோ? கல்யாணம் என்றாலே சண்டைக்கு வருவானே!'' என்றாள் அவன் தாயார். அதைக் கேட்டதும் அவனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. 'சம்மதம்' என்று சொல்லாமல் எதற்காக அம்மா இப்படியெல்லாம் சொல்லுகிறாள் என்றிருந்தது.

* * *

எப்படியோ சீக்கிரமே கல்யாணம் ஆகி விட்டது. கல்யாணத்தை வெறுத்து வந்த தன் மகன் வாசு கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்தது அவன் அன்னைக்கு எப்படிப் புரியவில்லையோ, அப்படியே வாசுவுக்கும் ராதாவின் முடிவு பற்றிப் புரியவில்லை.

ஒரு நாள் வாசு ராதாவுடன், தனித்திருக்கையில் அதற்குக் காரணம் கேட்டே விட்டான்.

''எதற்கு அந்தப் பயங்கரக் கனவின் ஞாபகம்? வேண்டாம், விட்டு விடுங்கள்!'' என்றாள் ராதா.

''கனவா? கட்டாயம் சொல்லித்தான் ஆகவேண்டும். அந்தக் கனவின் பயத்தைப் போக்க நான்தான் பக்கத்தில் அன்று போல

நிற்கிறேனே?" என்றான் வாசு. அவன் பயந்து கொண்டே சொன்னான்:

"அன்றைக்கு அங்கேயிருந்து வந்த பிறகு எனக்குத் தூக்கமே வரவில்லை. புரண்டு புரண்டு படுத்தேன். அதனிடையே ஒரு கனவு. அப்பப்பா! எண்ணினால் இப்பொழுது கூட மயிர்க் கூச்செடுக்கிறது.

கனவில் நான் மீண்டும் அதே பாலத்தின் பக்கம் வருகிறேன். அங்கே நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் உங்கள் உடை பத்தாம் பசலிமாதிரி இருக்கிறது. கையிலே வேல், கேடயம் எல்லாம் வைத்துக் கொண்டு நிற்கிறீர்கள். என்னை உங்களுக்கு அடையாளம் புரியவில்லை. எப்படியோ பேசுகிறீர்கள். நான் 'ஏன்?' என்று கேட்கிறேன்.

'எனக்குப் பெண்களைப் பார்க்கவே பிடிக்கவில்லை' என்கிறீர்கள். காரணம் கேட்கிறேன். நீங்கள் சொல்லுகிறீர்கள், ஒரு கதையை.

உங்களுக்கு ஒரு காதலி இருந்தாளாம். அவளும் நீங்களும் மிகவும் அன்னியோன்னியமாய் இருந்தீர்களாம். உங்கள் காதலை அறிந்த உங்கள் பெற்றோர் உங்கள் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்தார்களாம்.

கல்யாணத்திற்கு ஒரு வாரத்திற்கு முன்னால் ஓர் தினம் இதே பாலத்தின் பக்கத்தில் நீங்கள் இருவரும் சந்திக்கிறீர்களாம். இருவரும் மனம் விட்டு அளவளாவிக் கொண்டிருக்கும்போது யாரோ சிலர் ஓடிவந்து உங்களை நையப் புடைத்து விட்டு அந்தப் பெண்ணைத் தூக்கிச் சென்று விட்டார்களாம். 'அவள் அப்படி சாகஸம் செய்து விட்டாள். அவளுக்கு நம்மிடம் காதல் இல்லை' என்று நீங்கள் எண்ணினீர்களாம். ஆனால் அந்தப் பெண்ணின் பிணம் மறுநாள் காலையில் இதே பாலத்தின் அடியில் கிடந்தபோதுதான் அவளுடைய நிரபராதத் தன்மை உங்களுக்கு தெரிந்ததாம். தெரிந்து என்ன செய்வது?

உடனே தற்கொலை செய்து கொள்ள முயன்றீர்களாம். அப்போது அங்கே கோட்டையைப் பார்க்க வந்திருந்த ராணி மங்கம்மாள் உங்களைத் தடுத்து நிறுத்தி விட்டாளாம். அன்றிலிருந்து இங்கேயே தவமிருக்கிறேன் என்று நீங்கள் சொல்லுகிறீர்கள்.

நான் பயந்து விட்டேன். ஏதோ பேயிடம் பேசுகிறோமோ என்று எண்ணி நான் அலறி விட்டேன். அப்போதுதான் நீங்கள் சுரங்கத்தில் இருந்தமாதிரி ஒரு நிலையில் நிற்கிறீர்கள். அதே இன்ப எண்ணத்தில் கல்யாணத்துக்குச் சம்மதித்து விட்டேன்."

அதைக் கேட்ட வாஸு 'ஓஹோ' என்று சொல்லி ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தான். அவன் மனத்தில் ஆயிரமாயிரம் எண்ணங்கள் ஓடின. "பூர்வ ஜன்ம வாசனைதானா, ராதாவின் காதல்?" என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் ஓடியது.

"ஏன் வாயடைத்து விட்டீர்கள்?" என்றாள்.

"ஒன்றுமில்லை. மங்கம்மாளையும், பார்த்திப சோழனையும் வாழ்த்திக் கொண்டிருக்கிறேன்!" என்று சொல்லிச் சிரித்தான் வாசு.

# குன்றின் மேலே



ஆசிரியர் : டோனல்டு பட்டின்ஷா,
நியூஸிலந்து

மொழிபெயர்ப்பு : வாஞ்சி

குன்றின் ஒரு புறத்தில் பயங்கரமான நெருப்பு மண்டலம்! மற்றொரு புறத்தில் கண்களுக்குக் குளிர்ச்சியைக் கொடுக்கும் இனிய பசுமைத் தோற்றம்!

ஒரு புறத்தில் மனிதர்கள் துவேஷ வெறி கொண்டு ஒருவரை யொருவர் இரக்க மின்றிக் கொன்று குவித்தனர். எங்கும் உதிர வெள்ளம் ஓடியது. ஆனால் மற்றொரு புறத்திலோ எங்கு பார்த்தாலும் அமைதியும் ஆனந்தமும் நிலவின.

ஒரு புறத்திலே போரில் படுகாயம் அடைந்தவர்களின் பரிதாபகரமான ஓலம் நிருதயத்தைப் பிளந்தது. மற்றொரு புறத்தில் ஓய்வின்றி ஓடி விளையாடும் குழந்தைகளின் குதூகல ஆரவாரம் செவிகளுக்கு அமுதமாக இருந்தது.

குன்றின்மேல் நின்று கொண்டிருந்த கானரும் நானும் ஏககாலத்தில் அந்த இரண்டு காட்சிகளையும் ஒப்பிட்டுப் பார்த்தோம்.

எனது அருமை நண்பன் கானர் ஒரு பெரு மூச்சு விட்டான். அந்த மூச்சு கானரின் துக்க வாழ்க்கை வரலாறுகளை மறுபடியும் விவரமாக எனக்கு எடுத்துக் கூறுவது போல் தோன்றியது!

கிரீஸ் தேசத்தைச் சேர்ந்த மேற்படி குன்றின் ஒரு புறத்தில் இரண்டாவது உலக மகா யுத்தம் உக்ரமாக நடந்து கொண்டிருந்தது. மற்றொரு புறத்தில் இயற்கைக் காட்சிகள் நிறைந்த அந்தக் கிராமம் இருந்தது.

இன்னும் சில நாட்களில் போர் மேகங்கள் அந்தக் கிராமத்தையும் சூழ்ந்து கொண்டு நெருப்பு-மாரி பொழியப் போவது நிச்சயம். இப்போது குதூகலமாக விளையாடும் குழந்தைகளின் கதி அப்போது என்ன ஆகும்! அப்போது அமைதியும் ஆனந்தமும் அடியோடு மறைந்து, பேரிடி ஓசையும் மரண ஓலமும் காதைப்பிளக்கும்.

உலகத்தில் அமைதி, சந்தோஷம், சுதந்திரம், சுபிட்சம் இவற்றை ஒழிப்பதற்காகவே யுத்தம் என்ற பயங்கரமான கருவியைச் சில கொடிய மனிதர்கள் கண்டு பிடித்திருப்பதாகக் கானர் எண்ணினான்.

கிறிஸ்து பிறந்து, அவர் சிலுவையில் அடிக்கப்பட்டு, அவரது உபதேசங்கள் உலகத்தில் பரவி ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகியும், இன்னும் ஜனங்கள் ஒருவரை யொருவர் கொன்று குவிப்பது கானருக்கு விசித்திரமாகத் தோன்றியது.

இந்த எண்ணம் துக்கத்தில் தோய்ந்து கிடக்கும் அவனுடைய மன வேதனையை மறுபடியும் கிளறத் தொடங்கியது.

எனவே, வழக்கம்போல் கானர் தன் துயரத்தை மறப்பதற்காக என்னையும் அழைத்துக்கொண்டு சாராயக் கடைக்குப் புறப்பட்டான்.

யுத்த ஆரம்பத்தில் கானரின் மனைவியும் இரண்டு குழந்தைகளும் சென்ற கப்பல், ஜெர்மன் நீர்மூழ்கிக் கப்பல் பிரயோகித்த டார்ப்பிடோவினால் தாக்கப்பட்டு நொறுங்கி விட்டது.

அதிலிருந்து கானரின் சுபாவம் அடியோடு மாறி விட்டது. அதற்கு முன் சதா சர்வ காலமும் சிரித்துக் கொண்டும் கவலையற்றும் இருந்த கானரை ஆறாத் துயரம் ஆட்கொண்டது. தன் மனைவிக்கும் குழந்தைகளுக்கும் நேர்ந்த விபத்தை நினைத்து அவன் கண்ணீர் விடாத நாளே கிடையாது. பதினாயிரக் கணக்கான சிப்பாய்களுக்கு நடுவில் இருந்தும் அவனுக்குத் தான் இந்த உலகில் அனாதையாகவும் தன்னந் தனியனாகவும் தவிப்பது போல் தோன்றியது.

மேற்படி விபத்துக்கு முன் மகா தைரியசாலியாகவும் அஞ்சா நெஞ்சனாகவும் இருந்த கானர், அதன் பிறகு கோழையாக மாறி விட்டான். இனிய சுபாவம் படைத்திருந்த அவன் மனத்தில் துவேஷ உணர்ச்சி பொங்கியது. அவன் இந்த உலக வாழ்க்கையில் நம்பிக்கை இழந்து ஒரு நோயாளியைப் போல் தோன்றினான்.

"எவ்வளவோ முயன்றும் நான் என் மனைவியையும் அருமைக் குழந்தைகளையும் மறக்க முடிய வில்லையே! நான் விழித்துக் கொண்டிருக்கும் போதும் தூங்கும் போதும், இருபத்தி நாலு மணி நேரமும் அவர்கள் என் முன் வந்து நிற்கிறார்களே...மனிதன் மறக்க முடியாத கவலை இந்த உலகத்தில் எதுவும் இருக்க முடியாது என்று நான் எண்ணிய காலம் உண்டு. உண்மையான தைரியசாலியாயின் எத்தகைய கஷ்ட நஷ்டங்களையும் சகித்துக் கொள்ள முடியும் என்று நான்

அகில உலகச் சிறுகதைப் போட்டியில் முதல், இரண்டாவது பரிசுகள் பெற்ற கதைகளும், அந்தப் போட்டியில் கலந்து கொண்டு இந்தியாவில் பரிசு பெற்ற பல்வேறு பாஷைக் கதைகளும் இது வரையில் வெளியாயின. மேற்படி போட்டியில் அந்தந்த நாட்டில் பரிசு பெற்ற வெளி நாட்டுக் கதைகள் இவ்வாரத்திலிருந்து தொடர்ச்சியாக வெளிவரும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

கருதியது உண்டு. ஆறாத மனப்புண் என்று எதுவுமில்லை என்ற சித்தாந்தத்துடன் நான் இருந்து வந்தேன். ஆனால் இப்போதோ என் மனப்புண் நாளுக்கு நாள் புரையோடி என் தேகம் முழுவதையும் அரித்து வருகிறது. இந்தப் புண்தான் என் வாழ்வுக்கு யமனாக முடியப் போகிறது என்பதிலும் சந்தேகம் இல்லை'' என்று கானர் சகிக்க முடியாத வேதனையுடன் கூறும் போது என் நெஞ்சம் துடிக்கும். அவனுக்கு எப்படி ஆறுதல் கூறுவது என்று தெரியாமல் தவிப்பேன்.

*　　　*　　　*

“கொலை மயமான இந்தப் போர் முனையை மறந்து விட்டு, இன்ப மயமான அந்தக் கிராமத்துக்குச் சென்று வருவோமா!'' என்றான் கானர்.

அப்போது நாங்கள் அந்தக் குன்றின் மீது முகாம் போட்டிருந்தோம். கானருக்குச் சிறிது நேரமாவது மன ஆறுதலைக் கொடுக்கக் கூடிய எதையும் நான் மறுப்பதில்லை. எனவே அவனது கோரிக்கைக்கு உடனே இசைந்தேன்.

மேற்படி கிராமத்தைச் சுற்றியுள்ள வயல்களின் பசுமை அற்புதமான காட்சியாக இருந்தது. குன்றுக்கு அப்பால் கோரமான யுத்தம் நடப்பதைக் குறித்துச் சிறிதும் கவலைப்படாமல் ஆடுகளும் மாடுகளும் அமைதியாக மேய்ந்து கொண்டிருந்தன. நாளைக்கு என்ன நேரப் போகிறது என்பதைப் பற்றி என்னளவும் கவலையின்றிக் குழந்தைகள் கோலாகல சப்தத்துடன் சிரித்து விளையாடிக்கொண்டிருந்தன. ஏன்! பெரியவர்களுடைய முகத்தில்கூட அதிகக் கலக்கம் எதுவும் தென்படவில்லை. பாவம்! நிரபராதிகளான தாங்கள் இருக்கும் இடத்துக்கு யுத்தம் வராது என்பது அவர்களுடைய எண்ணம் போலும்!

தெருவில் பெண்களைத் தவிர குழந்தைகள், பெரியவர்கள் சகலரும் நடமாடிக் கொண்டிருந்தார்கள். சமீபத்தில் சிப்பாய்கள் முகாம் போட்டிருப்பதை அறிந்த பெண்கள் வெளியே தலையைக் காட்ட மாட்டார்கள் என்பது எங்களுக்குத் தெரியும். இது வெகு காலமாக எங்களுடைய அனுபவம் அல்லவா! அதனால் நானும் கானரும் அதைக் குறித்து ஆச்சரியப்படவில்லை.

தெருவில் எத்தனையோ சிறுவர் சிறுமிகள் விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களில் எவரும் கானரின் கவனத்தைக் கவரவில்லை. ஆனால் ஒரு கிழவருடன் சென்று கொண்டிருந்த இரண்டு குழந்தைகளை மாத்திரம் கானர் உற்று உற்றுப் பார்க்கத் தொடங்கினான்.

இதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. கப்பல் மூழ்கி இறந்த கானரின் குழந்தைகளுக்கு என்ன வயதோ அதே வயது தான் மேற்படி கிழவருடன் சென்ற குழந்தைகளுக்கும் இருக்கும். எனவே தன் குழந்தைகளைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கும் கானர் அந்த இரண்டு குழந்தைகளையும் உற்றுப் பார்த்ததில் வியப்பில்லை.

ஆனால், அந்தக் குழந்தைகள்—அந்தச் சிறுமியும் சிறுவனும் கானரை அடிக்கடி உற்றுப் பார்த்துப் புன்முறுவல் செய்ததைக் கண்டதும் நான் திடுக்கிட்டேன். அதே சமயம் ஆச்சரியத்தில் மூழ்கினேன். ஏனெனில் சற்றேறக் குறைய கானருடைய குழந்தைகளைப் போலவே அந்தக் குழந்தைகளின் முகபாவங்களும் தோற்றமும் இருந்தன!

எனினும் அவர்கள் நிச்சயமாகக் கானரின் குழந்தைகள் தான் என்றும் சொல்வதற்கில்லை.





சிருஷ்டியின் எண்ணிக்கையற்ற விசித்திரங்களில், சேஷ்டைகளில் இதுவும் ஒன்று என்று எனக்குத் தோன்றியது.

ஒரு வேளை எப்போதும் தன் குழந்தைகளைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கும் கானருக்கு அந்தக் குழந்தைகளைக் கண்டு வீண் பிரமை ஏற்பட்டிருக்கலாம் என்றும் நினைப்பதற்கில்லை. ஏனெனில், அந்தக் குழந்தைகளைக் கண்ட போது எனக்கும் அதே பிரமை உண்டாயிற்று!

கானர் திடீரென்று அந்தக் கிழவரிடம் சென்று "இந்தக் குழந்தைகள் யார்!" என்று கேட்டான்.

இது என்ன பைத்தியக்காரத்தனமான கேள்வி! அவர்கள் அந்தக் கிழவரின் பேரக் குழந்தைகளாக இருக்கலாம்.

ஆனால் மேற்படி கேள்விக்கு அந்தக் கிழவர் அளித்த பதில் என்னைத் தூக்கிவாரிப் போட்டது.

"இவர்கள் யாரா! முகத்தைப் பார்த்தால் தெரியவில்லையா! அனாதைக் குழந்தைகள்தான். போரில் பெற்றோரை இழந்த எத்தனையோ குழந்தைகளை என்னைப் போல் பலர் வளர்க்க முற்பட்டிருக்கிறார்கள். உங்களுக்குத் தெரியாதா!" என்றார் அந்தக் கிழவர்.

பொலிவிழந்திருந்த கானரின் முகத்தில் ஒளி வீசியது. உணர்ச்சி வசப்பட்டவனாய் அந்தக் குழந்தைகளை வாரி அணைத்துக் கொண்டான் அவன். அவர்களுக்குத் தின்பண்டங்கள் வாங்கிக் கொடுத்தான். வெகுநேரம் அவர்களுடன் கொஞ்சிக் குலாவிக் கொண்டிருந்தான்.

வெகு காலமாகப் போர்முனையில் இருப்பதால் குழந்தைகளின் முகங்களையே பார்க்க முடியவில்லை. அதனால்தான் கானர் அந்தக் குழந்தைகளைக் கொஞ்சுகிறான் என்று அந்தக் கிழவர் நினைத்துக் கொண்டார்.

நடுக் கடலில் மூழ்கி இறந்த கானரின் குழந்தைகள் உயிர் பெற்று வருவதற்குக் காரணமே இல்லை. ஏனெனில் அந்தக் கப்பலில் இருந்தவர்களில் ஒருவர்கூட மீண்டு வரவில்லை என்பது எனக்குத் தெரியும். இந்த உண்மை கானருக்கும் நன்றாகத் தெரிந்ததுதான்.

மேற்படி குழந்தைகள் சில அம்சங்களில் கானரின் குழந்தைகளைப் போல் இருந்தன. போதாக் குறைக்கு அவை அனாதைக் குழந்தைகள் என்று அந்தக் கிழவர் கூறியதால், வறண்டு பாலைவனமாகக் கிடந்த கானரின் மனம் குளிர்ந்தது.

அன்றிலிருந்து அவன் சுபாவம் அடியோடு மாறியது. அவன் முகாமில் சீட்டி யடித்துக்கொண்டு குதூகலமாகவும் உற்சாகமாகவும் இருந்தான். அவனது சந்தோஷத்துக்குக் குந்தகம் விளையும் விதத்தில் எதுவும் பேசிவிடக் கூடாது என்பதில் நான் மிகவும் ஜாக்கிரதையாக இருந்தேன்.

கானர் அடிக்கடி அந்தக் கிராமத்துக்குச் சென்று மேற்படி குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தான்.

அற்ப சம்பவங்கள்கூட மனிதனுடைய வாழ்க்கையை அடியோடு மாற்றி விடுகின்றன என்பதை நான் கானர் விஷயத்தில் நேரில் கண்டேன்.

இனிமேல் அந்தக் குழந்தைகளின்றி அவனால் உயிர் வாழ முடியாது என்று எனக்குத் தோன்றியது. அதுவரையில் வாழ்வை வெறுத்திருந்த கானருக்கு மறுபடியும் வாழ்க்கையில் பற்றுதல் ஏற்பட்டது. அவனை விட்டு அகன்றிருந்த தைரியம், உற்சாகம், ஒழுக்கம் முதலிய குணங்கள் மீண்டும் அவன் மனதில் துளிர் விடலாயின!

* *

குன்றின்மீது ஜெர்மன் விமானங்கள் வெடி குண்டுகளை வீசத் தொடங்கின. சில குண்டுகள் அமைதியும் ஆனந்தமும் நிலவிய அந்தக் கிராமத்திலும் விழுந்து, பலரைப் பலிகொண்டன.

தங்கள் கிராமத்துக்கும் யுத்தம் வந்துவிட்டது; இனி அதிலிருந்து தாங்கள் தப்புவதற்கு முடியாது என்பதைக் கிராமவாசிகள் உணர்ந்தனர்.

அவ்வளவுதான்! மற்ற இடங்களில் நிகழ்ந்தது போலவே அங்கும் நிகழலாயிற்று. அதாவது ஜனங்கள் குழந்தை குட்டிகளுடனும் மூட்டை முடிச்சுகளுடனும் கிராமத்திலிருந்து சாரி சாரியாக வெளியேற ஆரம்பித்தனர்.

அவர்கள் எல்லாம் தலைமுறை தலைமுறைகளாக வாழ்ந்து வந்த வீடு வாசல்களை விட்டு விட்டு ஓடிய காட்சி பரிதாபமாக இருந்தது. குழந்தைகளையும் கைக் குழந்தைகளையும் தூக்கிக்கொண்டு சோகமே உருவெடுத்தாற் போல் ஏராளமானவர்கள் சென்றனர். அவர்கள் எங்கு செல்லப் போகிறார்களோ! அடுத்த வேளைச் சாப்பாட்டுக்கு அவர்கள் என்ன செய்யப் போகிறார்களோ! அவர்களில் பசிக்கும் பட்டினிக்கும் நோய்க்கும் எத்தனை பேர் பலியாகப் போகிறார்களோ!

இந்த அலங்கோலத்தை நாங்கள் பார்க்க நேர்ந்தது இது முதற் தடவை அல்ல. இதற்கு முன் போர் நடந்த பல கிராமங்களிலும் இதே காட்சிகளைத்தான் கண்டோம்.

"இந்தக் கொடிய யுத்தம் இவ்விதம் நிரபராதிகளான ஜனங்கள் வீடு வாசல்களை இழந்து பட்டினியாக ஓடும்படி செய்கிறது. பகைவர்களுக்கு இந்தக் குழந்தைகள் என்ன இடையூறு செய்தனரோ தெரியவில்லை" என்று அங்கலாய்த்தான் கானர்.

நானும் கானரும் விமான எதிர்ப்பு பீரங்கிக்கு அருகில் நின்று கொண்டிருந்தோம். பகைவர்களின் விமானங்களைச் சுடுவதுதானே எங்கள் வேலை.

கிராம ஜனங்கள் கிராமத்தைக் காலி செய்து கொண்டிருக்கும் சமயத்தில் ஜெர்மன் விமானங்கள் மறுபடியும் நாசவேலையைத் தொடங்கின.

அவற்றைக் கண்டு ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள் யாவரும் அலறிக் கொண்டு அலங்கோலமாக ஓடுவதை நாங்கள் தூரதிருஷ்டிக் கண்ணாடியினால் பார்க்க முடிந்தது.

வெடிகுண்டு மாரியால் ஏராளமானவர்கள் ஈசல்களைப் போல் கீழே விழுந்து மடிந்தனர். அவ்வமயம் அந்தக் கிழவர், கானரின் உள்ளத்தைக் கவர்ந்த இரண்டு குழந்தைகளை அழைத்துக் கொண்டு போவதைக் கானர்தான் முதலில் பார்த்தான். அந்தக் கூட்டத்திலும் குழப்பத்திலும் அலங்கோலமான நிலைமையிலும் கானர் அந்தக் குழந்தைகளைக் கண்டுபிடித்தது எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

வெடிகுண்டுகளிலிருந்து சிதறிய ஒரு சிதளினால் அந்தக் கிழவர் கீழே விழுந்து மாண்டார். உடனே மேற்படி குழந்தைகள் வீறிட்டு அழுதுகொண்டு அங்கு மிங்கும் ஓடின.

அப்போது தற்செயலாக நான் கானரின் முகத்தைப் பார்த்தேன். அவனது முகம் மிகவும் கோரமாக மாறி யிருந்தது.

அவ்வளவுதான்! அவன் விமான எதிர்ப்பு பீரங்கியைச் சுடத் தொடங்கினான். சில விநாடிகளுக்குள் ஜெர்மன் வெடி குண்டு விமானங்கள் ஒன்று, இரண்டு, மூன்று, நாலு என்று கோர சத்தத்துடன் கீழே விழுந்தன.

அதற்கு முன் நாங்கள் ஒரு ஜெர்மன் விமானத்தைக் கூடச் சுடுவதற்கு முடியவில்லை. மேற்படி குழந்தைகளுக்கு ஆபத்து நேர்ந்து விடுமோ என்ற பயமானது கானருக்கு அமானுஷ்யமான பலத்தையும் குறி பார்த்துத் தவறாமல் சுடும் சக்தியையும் கொடுத்து விட்டது!

அதன் பிறகு அந்தப் பிரதேசத்துக்கு ஜெர்மன் விமானங்கள் வரவில்லை. அதிலிருந்து போரும் எங்களுக்குச் சாதகமாக மாறிவிட்டது!

அன்றிரவே நாங்கள் இருவரும் அந்தக் கிராமத்துக்குச் சென்றோம். அனாதைகளான அந்த இரண்டு குழந்தைகளையும் பராமரித்து வளர்க்கும் பொறுப்பைக் கானர் ஏற்றுக் கொண்டான்.

யுத்தம் சாதகமாக மாறியதற்குக் கானர்தான் பொறுப்பாளி என்பதை உயர்தர இராணுவ அதிகாரிகள் உணர்ந்தனர்.

சாதாரண பீரங்கிச் சிப்பாயாக இருந்த கானர் அதிசீக்கிரத்தில் டிவிஷன் தலைவர் ஆனான். அதிலிருந்து கானருக்கு வெற்றி மேல் வெற்றி கிடைத்ததால். அவன் இரண்டாவது மகாயுத்தம் முடிவதற்கு முன்பே இராணுவத்தில் மிகவும் உயர்ந்த பதவிக்கு வந்து விட்டான்.



ஒரு சமயம் கானருக்கு வீரப் பதக்கம் அளித்த போது ஜனங்கள் சந்தோஷ ஆரவாரம் செய்தனர். அப்போது அந்த வீரப் பதக்கத்துக்கு உரியவன் கானர் அல்ல. அதற்கு உரியவர்கள் அவனுடைய வளர்ப்புக் குழந்தைகள் தான்' என்று உரக்கக் கத்தலாமா என்று எனக்குத் தோன்றியது!

அந்தக் குழந்தைகள் இராவிடில் கானர் ஒன்று யுத்தத்தில் இறந்திருப்பான், அல்லது தன் உயிரைத் தன் கையினாலேயே போக்கிக் கொண்டிருப்பான் என்பது நிச்சயம்.

பாலைவனம் போல் வறண்டு கிடந்த கானரின் வாழ்க்கை துளிர்விட்டு இன்ப மயமானதற்கும், அவனுக்கு வெற்றி மேல் வெற்றி கிடைத்தற்கும் அந்தக் குழந்தைகள் தான் காரணம் என்ற இரகசியம் என்னையும் கானரையும் தவிர இந்த உலகத்தில் வேறு யாருக்குத் தெரியும்!

"உழைக்கத்தான் வேண்டும்! உழைப்பால்தான் மனிதன் உயருவான்!"

# உழைப்பால் உயர்ந்த ஏழை

## 'பகீரதன்'



சந்திரா-

**கா**ட்டில் கண்டதைச் சாப்பிட்டு வன விலங்குகளுடன் அநாகரிகமாக வாழ்ந்த ஆதி மனிதனை விட நாம் எவ்வளவோ வகையில் முன்னேற்றமடைந்து விட்டோம். அந்தக் காலத்து மனிதனின் வாழ்க்கையையும் இப்பொழுதைய மனிதனின் வாழ்க்கையையும் ஒப்பிட்டுப் பார்த்தால் கற்பனைக்கு எட்டாத அளவுக்கு வித்தியாசம் இருக்கிறது. நாம் அவ்வளவு உயர்ந்து விட்டோம். ஆனால் ஒரே விஷயத்தில் மட்டும் ஆதி மனிதன் பட்ட கஷ்டத்தையே இன்றைய மனிதனும் படுகிறான். உண்ண உணவும் உடுக்க உடையும் வசிக்க வீடும் பெற மனிதன் உழைத்தான். இரத்த வியர்வை சிந்த உழைத்தான். இன்றும் உழைக்கிறான். நெற்றி வியர்வை நிலத்தில் விழக் காலமெல்லாம் பாடுபட்டு உழைக்கிறான். உழைத்துக் கொண்டே இருக்கிறான்.

உழைக்க வேண்டியதுதான். உழைப்பால்தான் மனிதன் உயருவான். இன்று மிக உன்னத நிலையில் உள்ள மனிதர்களும் உழைப்பினால் உயர்ந்தவர்கள்தான். நல்ல நிலைமையில் இருக்கும் நாடுகளும் உழைத்து உழைத்து உயர்ந்தவைகள்தான். சோம்பல் மிகவும் கெடுதிதான். ஆனால் ஒரு மனிதனின் உழைப்பைப் பிறர் வஞ்சிக்கலாமா! ஒரு ஏழையின் உழைப்பைப் பெற்று அவனை ஏமாற்றலாமா! அவனுக்கு வேண்டிய குறைந்த பட்ச தேவைகளுக்காவது அவன் உழைப்புக்கு ஊதியம் பெற வழி செய்ய வேண்டாமா!

நாம் காலத்தையும் தூரத்தையும் வென்று விட்டோம். நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களையும் வசப்படுத்திவிட்டோம். இயற்கையின் நியதியைக் கூட எதிர்க்கும் திறமையை விஞ்ஞானத்தால் வெற்றி பெற்று விட்டோம். ஆனால் ஒரு மனிதன் இன்னொரு மனிதனைப் பார்த்து அவனும் மனிதன்தான் என்று எண்ணும் ஞானத்தை மட்டும் பெறவில்லை. உண்ண உணவின்றி உடுக்க உடையின்றி வசிக்க வீடின்றி நாளெல்லாம் உண்மையிலேயே உழைத்துப் பாடு படும் மக்கள் வேதனைப்படுகின்றனர். ஒரு சாண் வயிற்றை நிரப்பும் உணவுக்காக வருந்தி அலைந்து வாடிக்கொண்டிருக்கின்றனர். அப்படி வருந்தி வாடும் கூட்டத்துக்கு வசதி படைத்த கூட்டம் வாழும் வகையைச் செய்து கொடுக்க முற்படவில்லை. அந்த ஏழை மக்களுக்காகத் தன் சுக வாழ்வில் ஒரு சிறிதும் குறைத்துக் கொள்ள வசதி படைத்த கூட்டம் விரும்பவில்லை. ஏழை மக்கள் பட்டினியாலும் பசியாலும் உயர்ந்த சாதி தாழ்ந்த சாதி என்ற சாதி வித்தியாசத்தினாலும் கொடுமைப் படுகின்றனர். பட்டினியோடும் நோயோடும் உழைத்து உழைப்புக்கு ஏற்ற ஊதியம் பெற முடியாமல் வாடி வதங்கிச் செத்து மடிந்து கொண்டிருக்கின்றனர்.

அப்படி வேதனைப்படும் ஆயிரக் கணக்கான ஏழை மக்களில் ஒருவனாக இருந்தவன் தான் ஏழை வேலன். கொடியவற்றுள் எல்லாம் கொடியதான இளமையில் வறுமைக்கும் ஆளானவன் தான் சிறுவன் வேலன். அதனினும் கொடியதான அனாதையாக இந்தப் பரந்த உலகில் விடப்பட்டவன் தான் ஆதரவற்ற வேலன். ஆனால் இன்று அந்த ஏழை வேலன் மறைந்து விட்டான். உழைத்து உழைத்து உயர்ந்து விட்டான். உலகமே புகழும் வள்ளல் வேலனாகிவிட்டான். வேலனின் புகழ் பரவாத இடமே இல்லை. மனித சமூகம் அவனை வாழ்த்தி வணங்குகிறது! வேலனோ, "உழைப்பால் உயர்ந்த ஏழை" என்று தன்னைச் சொல்லிக் கொள்ளுவதில் தான் மிகவும் பெருமைப்படுகிறான்.

இந்த வேலன் யார்! இவன் ஏன் அனாதையாக, ஆதரவற்றவனாக இருந்தான்! எப்படிப் பாரெல்லாம் புகழும் வள்ளல் வேலனான்!

* * *

**பெ**ரிய ஆலமரத்தின் நிழலில் படுத்த வண்ணம் யாரையோ எதிர்பார்த்துக்கொண்டிருந்தான் கிழவன் நடேசன். எலும்பும் தோலுமாக ஆனால் நல்ல உறுதியுடன் இருந்த அவன் நீண்ட உடல் ஆலமரத்துக்கு அடியில் கிடந்தது. அவன் உள்ளத்தில் ஏதோ கவலை. அப்படியும் இப்படியுமாக புரண்டு கொண்டிருந்தான். பசியின் களைப்பினாலும் வெய்யிலின் கொடுமையினாலும் அவன் முகம் வாடிப் போய் உடல் கருத்திருந்தது.

கிழவன் தலையை உயர்த்திப் பார்த்தான். பிரகாசமான சூரிய வெளிச்சத்தில் மரகதப் போர்வையை விரித்து விட்டது போலப் பச்சைப் பசேலென்று தெரிந்த வயல்களுக்கு நடுவே யாரோ நடந்து வந்தது தெரிந்தது.

சுருக்கங்கள் நிறைந்த கிழவனின் முகத்தில் இருந்த வேதனையும் இரக்கமும் கொஞ்சம்

விலயினை. அவன் ஒரு தரம் அடக்கமாக இருமினான். கண்ணுக்கு எட்டிய தூரம் ஒரே பசுமையாகக் காட்சி அளித்த அந்த வயல் வெளியில் அவன் இருமலின் சத்தத்தைத் தவிர வேறு சத்தம் கிடையாது. கண்களை ஒரு தரம் அகலத் திறந்து பொன் விளையும் பூமியையும் நெற் பயிரையும் பார்த்தான். உழைத்து உழைத்து உரம்பெற்ற தன் கைகளைப் பார்த்தான். அப்பொழுது மெதுவாக அடித்த காற்றில் பயிர்கள் அசைந்து ஆடின. அதைப் பார்த்துத் தன் துக்கமெல்லாம் மறைந்ததாக எண்ணிக் கிழவன் நடேசன் மகிழ்ந்தான். ஆம், அப் பயிர்கள் அசைந்து அசைந்து நெளிந்து நெளிந்து ஆடியது கிழவனின் துக்கத்தைத் துடைக்க விரும்புவது போலவே இருந்தது. கொடிய வெய்யிலை வாரிக் கொட்டிய மேகமற்று இருந்த நீல வானம் கண்ணைச் சிமிட்டுவது போல அந்தப் பயிர்கள் ஓயாமல் அசைந்தாடின.

தூரத்தில் தெரிந்த உருவம் வர வர நெருங்கி வந்து கொண்டிருந்தது. கிழவன் எழுந்து உட்கார்ந்தான். கீழே தரையில் விரித்துப் போட்டிருந்த வேஷ்டியை எடுத்து உதறினான். தலையில் ஜம்மென்று முண்டாக கட்டினான். முண்டாக கட்டியவுடனேயே கிழவன் திடீரென்று ஏதோ மாய மந்திரத்தால் பத்து வயது குறைந்து விட்டது போலக் காட்சி அளித்தான்.

வயலின் மத்தியில் வந்து கொண்டிருந்த அந்த ஆள் கிழவன் தங்கியிருந்த ஆலமரத்தடிக்கு வந்து வந்து விட்டான். வெய்யில் தாங்காமல் 'உஸ்' என்று பெருமூச்சு விட்டான்.

''மாடுகள் பயிரை அழித்து விடாமல் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். நான் எஜமானனிடம் சொல்லி விட்டு கடுவக் கரைக்கு என் மகள் வீட்டுக்குப் போகிறேன். திரும்பிவர ஒரு வாரம் பிடிக்கும்'' என்று கூறிக் கிழவன் நடேசன் கிளம்பி விட்டான். அவன் உடல் தளர்ந்து இருந்தாலும் உள்ளம் உறுதியாக இருந்தது. இல்லாவிட்டால் இந்த வயோதிக வயதிலும் இப்படிப் பாடுபட முடியுமா! விடுவிடென்று நடக்க முடியுமா!

வாழைக் கொல்லை கிராமத்தில் மனிதர்கள் இருப்பதுபோலவே தெரியவில்லை. வெய்யிலுக்காக எல்லாரும் வீட்டிலேயே அடைபட்டுக் கிடந்தனர். கிராமத்து வீதிகளில் ஈ, காக்காய்கூட காணவில்லை. தெருக்கள் வெறிச் சென்று இருந்தன. ஆங்காங்கே கட்டப்பட்டிருந்த மாடுகள் வாயில் அசைபோட்ட வண்ணம் படுத்துக் கிடந்தன. வழக்கமாக அவனைக் கண்டவுடன் குரைக்கும் கறுப்பு நாய் கூடக் குரைப்பதை மறந்து பூவரசமரத்து நிழலில் நாக்கைத் தொங்கப் போட்ட வண்ணம் காலை நீட்டிப் படுத்துக் கொண்டிருந்தது.

அந்தக் கிராமத்தில் பெரும்பாலும் கூரை வீடுகள்தான். அந்தப் பெரிய தெருவின் இருபுறமும் இருந்த குடிசைகள் ஒன்றின் மேல் ஒன்று மூட்டி மோதிக்கொண்டிருப்பது போல நெருக்கியடித்துக் கொண்டிருந்தன. அவற்றின் கூரை காலத்தினால் உருக்குலைந்து போயிருந்தது. அந்தக் கூரை மீது பரங்கி, பூசணி முதலிய கொடிகள் படர்ந்து பார்ப்பதற்குப் பசுமையாகக் காட்சி யளித்தன. நடு நடுவே இரண்டொரு ஓட்டு வில்லை போட்ட வீடுகள் திருவிழாக் காலங்களில் கிராம மக்களின் கூட்டத்துக்கு மத்தியில் காணப்படும் இரண்டொரு போலீஸ்காரர்களைப் போல சிவப்பாகக் காட்சி அளித்தன. அவற்றிற்கெல்லாம் மேலே ஒரே ஒரு மாடி வீடு மட்டும் சற்று எடுப்பாகத் தெரிந்தது.



அந்த வீட்டை நோக்கித்தான் கிழவன் நடேசன் சென்று கொண்டிருந்தான். அவன்மீது வியர்வை கொட்டிக்கொண்டிருந்தது. தலையில் கட்டியிருந்த துணியால் அடிக்கடி முகத்தைத் துடைத்துக்கொண்டே நடந்தான். வெய்யில் தாங்க முடியாதபடியால் மூச்சு வாங்கியபடியே நடந்தான். அந்த மாடி வீட்டை யடைந்ததும் முண்டாகத் துணியை அவிழ்த்து உடம்பை யெல்லாம் துடைத்துக் கொண்டு உட்கார்ந்தான். அவன் களைப்புத் தீர எத்தனை நாழி ஆயிற்றோ!

''யாரு நடேசனா!'' என்ற குரல் கேட்டதும் உணர்வு பெற்று நிமிர்ந்து பார்த்தான்.

வாழைக் கொல்லைக் கிராமத்தின் பெரிய பண்ணையார் நின்று கொண்டிருந்தார். அந்தக் கிராமத்திலேயே பெரிய பண்ணையார் குடும்பம்தான் பரம்பரை பணக்காரக் குடும்பம். அவர் வைத்ததுதான் அந்தக் கிராமத்தில் சட்டம். அவரைப் பார்த்தவுடன் நடேசன் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தான். அருகில் கிடந்த துணியை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு மிகவும் அடக்க ஒடுக்கமாகக் கையைக் கட்டி நின்றான்.

சின்னஞ் சிறு வாலிபனாக இருந்த நாள் முதல் பெரிய பண்ணையாரின் குடும்பத்தில் வேலை பார்த்து வருகிறான் நடேசன். பெரிய பண்ணையாரின் வீடு வாசல், மாடு கன்று, நிலபுலன் எல்லாவற்றையும் தன் சொந்த சொத்தாகவே கருதி கண்காணித்து வருகிறான். இரவென்றும் பகலென்றும் பாராமல் உழைத்து வருகிறான். பண்ணையாரின் சொத்துக்களைத் தன் சொந்த சொத்தாகவே நினைத்து விட்டதால் ஊரில் பலபேரிடம் பயங்கரமாகச் சண்டை போட்டிருக்கிறான். ஒரு சமயம் பண்ணையாரின் நாத்தாங்காலுக்கு முதலில் தண்ணீர் பாய வேண்டும் என்பதற்காக உயிரையும் திரணமாக மதித்து ஒருவருக்கும் தெரியாமல் இரவோடு இரவாக ஒரு பெரிய வாய்க்காலுக்குக் குறுக்கே அணை போட்டுத் தண்ணீரைத் தேக்கி நாத்தங்காலுக்குத் தண்ணீர் பாய்ச்சி இருக்கிறான். இதனால் அவனுக்கு ஏற்பட்ட எதிரிகள் கொஞ்ச நஞ்ச மல்ல. இருந்தாலும் பண்ணையார் வீட்டு வேலைகளைச் செய்வதில் அவன் அவ்வளவு அக்கறைகாட்டிக் கொண்டு வந்தான்.

இதற்கெல்லாம் அவன் பெற்று வந்த கூலி தினம் இரண்டு வேளைச் சாப்பாடு. வருஷம் ஒன்றுக்கு ஆறு கலம் நெல். அவ்வளவு தான். வருஷம் முன்னூற்று அறுபத்தைந்து நாளும் உழைக்க வேண்டும். தினம் இருபத்து நாலு மணி நேரமும் வேளா வேளைக்குச் சரியாகச் சாப்பிடாமல்கூட உழைக்க வேண்டும். இரவு

வேளைகளில் தூங்கினால் அதுகூட வயல் வெளியிலோ, களத்து மேட்டிலோதான் தூங்க வேண்டும், காவலுக்காக.

இந்த வேலைகளில் எப்பொழுதாவது ஏதாவது கொஞ்சம் குறைவு ஏற்பட்டு விட்டால் பண்ணையாரின் பயங்கரக் கோபத்துக்கு ஆளாகவேண்டும். பட்டணங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களைப் போல தினம் எட்டு மணி நேர வேலை கிராமத்தில் இருக்கும் உழவுத் தொழிலாளர்களுக்கு இல்லை. உழவுத் தொழிலாளர்களுக்கு அப்படி நேரக் கட்டுப்பாடும் இருக்கக் கூடாதுதான். அதற்காக ஐந்து பேர் வேலையை ஒரே ஆள் செய்ய வேண்டுமா! உழவர்கள் வாழ்க்கைத்தரம் உயருவதற்கு வேண்டிய சில சலுகைகளைக் கூடவா அவர்களுக்குச் செய்து கொடுத்து உதவக் கூடாது!

"எஜமான், நான்தான் நடேசனுங்க!" என்று கையைப் பிசைந்து கொண்டே சொன்னான் நடேசன். அதில் ஒரு பண்ணையாளுக்கு இருக்க வேண்டிய பண்பும் மரியாதையும் இருந்தன.

"ஏண்டா! வெய்யில் வேளையில் வீட்டுக்கு வந்து விட்டாயா! துரைக்கு வெய்யில் தாங்க முடியவில்லையோ! வயல் வெளியில் யார் இருக்கிறது! சாலைப் பக்கத்





தில் சற்று ஏமாந்தால் கூட மாடுகள் வந்து விடுமே!" என்று அதிகாரக் குரலில் அவனை அதட்டிக் கேட்டார் பெரிய பண்ணையார்.

"மாட்டுக்காரக் கண்ணுசாமி இருக்கிறான். அவனிடம் சொல்லி விட்டுத்தான் வந்திருக்கிறேன்" என்றான் கிழவன். அதைச் சொல்லுவதற்குள் அவன் உடலை ஆயிரம் கோணலாகச் செய்து கொண்டான். அவன் குரலில் ஒரு குழைவும் உண்மையும் கலந்து இருந்தன.

இந்தச் சமயத்தில் பெரிய பண்ணையாரின் மகன் பத்து வயது நிரம்பாத பாலகன் ஓடி வந்தான். "ஏன் அப்பா, நடேசனைக் கோவிக்கக்கிறீங்க! இப்பதானே அம்மாவிடம் இன்னைக்கு வெய்யில் தாங்க முடியலை என்று சொல்லிக்கிட்டு இருந்தீங்க! அவன் மட்டும் எப்படி வயல் வெளியில் வெய்யிலில் உட்கார்க்

திருப்பான்!'' என்று தன் மழலை மொழியில் கொஞ்சிக் கொஞ்சிக் கேட்டான்.

பாவம் பையன் மிகச் சிறியவன். அவன் இரத்தத்தில் இன்னும் இந்த உலகத்துக் கொடுமைகள் கலக்கவில்லை. அதிலும் பெரிய பண்ணையாரின் தயாள குணம் இன்னும் படியவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் தன் வீட்டுப் பண்ணையாளுக்காகப் பரிந்து பேசுவானா! அவனும் அல்லவா பண்ணையாருடன் சேர்ந்து கொண்டு அதிகாரம் பண்ணுவான்.

"உனக்கென்ன இங்கு வேலை! நீ உள்ளே போ!'' என்று பையனை ஆதரவோடு அழைத்துக் கொண்டு வீட்டுக்குள் சென்றார் பண்ணையார்.

இதற்குள் பண்ணையார் வீட்டுச் சமையல்காரி ஒரு இரும்பு மரக்காலில் பழைய அமுதைப் போட்டு அதில் இரண்டு பச்சை மிளகாயைத் தொட்டுக் கொள்ளுவதற்காக வைத்து எடுத்து வந்தாள். நடேசனுக்கு எதிரில் அதை வைத்து விட்டுப் போனாள். சிறுவன் அதை எடுத்துக் கொண்டு கொல்லைப் புறத்துக்குப் போனான். கிணற்றுக்கு அருகில் உட்கார்ந்து சாப்பிட்டான். வெய்யில் வேளையில் அந்தப் பழைய சோறு அவனுக்கு அமுதமாக இருந்தது. சாதத்தைச் சாப்பிட்டு இரண்டு வாய்த் தண்ணீரையும் குடித்த பிறகுதான் அவனுக்கு உயிர் வந்தது. அவன் சுருங்கிய முகத்தில் குழி விழுந்த கண்களில் ஒரு தெளிவு ஏற்பட்டது.

மரக்காலைக் கழுவிக் கவிழ்த்து வைத்து விட்டுக் கையை அலம்பிக் கொண்டு பண்ணையார் வீட்டு வாசலுக்கு வந்தான். பெரிய பண்ணையார் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு படுத்திருந்தார். ஒரு வேலைக்காரச் சிறுவன் அவருக்கு விசிறிக் கொண்டிருந்தான். கிராமம் அல்லவா! அங்கு



டாக்டர்:—வாங்கோ ஸார்! எங்கே நாலைந்து நாளாக இந்தப் பக்கமே வரக் காணோமே!

வந்தவர்:—நாலைந்து நாளாக ஒரே ஜுரமாக இருந்தது. அதனாலேதான் நான் இந்தப் பக்கமே வரவில்லை!

இன்னும் மின்சாரம் செல்லவில்லை. அதனால் மின்சார விசிறி கிடையாது. ஆட்களை வைத்துக் கொண்டுதான் விசிறிக் கொள்ள வேண்டும்.

மின்சாரத்தைக் கண்டு பிடித்த புண்ணிய வானைக் கையெடுத்துக் கும்பிட வேண்டும். இல்லாவிட்டால் தான் வியர்வையால் புழுங்க, வெய்யிலால் வாட, வயிற்றுப் பிழைப்புக்காகப் பிறருக்கு விசிறிப் பிழைக்கும் மனிதக் கூட்டமே இன்று பெரிதாயிருக்கும். நோயாளிகளுக்கு, முடியாதவர்களுக்கு, விசிறுவதால் குறையொன்று மில்லை; விசிற வேண்டியதுதான். ஆனால் விசிறுவதையே தொழிலாக, மனிதன் மனிதனையே இழிவு படுத்தும் தொழிலை மனிதர்கள் செய்யும்படி சொல்லுவது மனித தர்மத்துக்கு உகந்ததா!

சமூகத்தில் இன்னும் இதுபோன்ற நிலை இருக்கத்தான் செய்கிறது. சலவைத் தொழில், க்ஷவரத் தொழில், தோட்டித் தொழில் முதலிய மனித சமுதாயத்துக்கு மிக முக்கியமாக வேண்டிய புனிதமான தொழிலில் ஈடுபட்டுப் பாடுபடும் பாட்டாளிகளுக்கு மனித சமூகத்தில் அவ்வளவு மதிப்புக் கிடையாது. அவர்கள் வாழ்க்கைத் தரமும் உயர்வாக இல்லை. இந்தத் தொழிலில், ஈடுபட்டிருக்கும் தொழிலாளிகளுக்கு நவீன சாதனங்களைச் செய்து கொடுத்து அந்தத் தொழில்களையும் ஒரு நாகரிகமான தொழிலாக மாற்றுவதற்கு வழி வகைகள் செய்ய வேண்டும்.

பங்கா இழுத்த தொழிலாளியைவிட மின்சார விசிறியைச் சுற்றிவிடும் மின்சாரத் தொழிலாளியின் மதிப்பு உயர்ந்துதான் இருக்கிறது. அதைப் போல மேற்படி தொழிலாளர்களின் அந்தஸ்து உயரும் காலம் என்று வருமோ!

"எங்கேடா பார்த்துக்கொண்டு விசிறுகிறே! பார்த்து விசிறுடா!'' என்று ஒரு அதட்டு அதட்டினார் பண்ணையார். எதிரில் நின்றுகொண்டிருந்த நடேசனை ஏறெடுத்தும் பார்க்காமல் கண்ணை மூடியபடி சாய்வு நாற்காலியின் நீண்ட சட்டத்தில் காலைத் தூக்கிப் போட்டார்.

நடேசன் ஒருதரம் கனைத்தான்; மெதுவாக இருமினான். கவலையற்ற பண்ணையாரின் நெறிவிருந்த கன்னங்களுக்கு மேலே மூடியிருந்த கண்களை அவர் திறந்து பார்ப்பதாயில்லை.

மனதைக் கொஞ்சம் திடப்படுத்திக் கொண்டு "எஜமான்!'' என்றான்.

"என்ன!'' என்று கத்தினார் பண்ணையார். விசிறிக் கொண்டிருந்த சிறுவனின் உடல் ஒரு தரம் நடுங்கிக் குலுங்கியது. சிறுவன் பேசாமல் நின்று கொண்டிருந்தான். அவன்தான் இதுபோல் எத்தனையோ முறை பண்ணையாரைப் பார்த்திருக்கிறானே! ஏன் பயப்படப் போகிறான்!

"காவேரியைப் பார்த்துவிட்டு வர நடுவக் கரைக்குப் போகிறேன். என் மருமகன் கடிதம் போட்டிருக்கிறான். காவேரிக்கு இது பத்தாவது மாதமாம். எஜமான் பத்து ரூபாய் பணம் கொடுக்க வேண்டும். காவேரிக்கு நம் தோட்டத்துப் பம்பளிமாஸ் பழம் என்றால் ரொம்பவும் பிடிக்கும். அதிலும் இரண்டு பறித்துக் கொள்கிறேன்'' என்று கெஞ்சும் குரலில் சொன்னான்.

பண்ணையார் ஒரு கணம் மௌனமாக இருந்தார். அடுத்த கணம் தன் கண்களை அகலத் திறந்து நடேசனை முறைத்துப் பார்த்தார். "ஊருக்குப் போவதற்கு இதுதான் சமயம் பார்த்தாயா! வயலில் இப்பொழுதுதான் பயிர்கள் எல்லாம் பச்சை கொண்டு வருகிறது. அதற்கு யார் காலா காலத்தில் தண்ணீர் பாய்ச்சுவது!''

"நாலு நாளில் திரும்பி விடுகிறேன் எஜமான்.''




NUMBER TEN
VIRGINIA
MAGNUMS
№ 10
நல்ல
சிகரெட்
வாங்க
ஏன்
அதிக விலை கொடுக்கிறீர்கள்
10 விலை 3½ அணா
50 விலை ரூ 1/4
உள்ளூர் வரி அலாதி


ACI




குழந்தையும் நானும் வற்புறுத்திக் கேட்பது
கால்கேட் பேபி பௌடர்
கால்கேட் பொரேடெட் பேபி பௌடரை உபயோகித்த பிறகு நீங்களும் இதையே கூறுவீர்கள். இப்பௌடரில் மிகவும் நேர்த்தியான டால்க், போரிக் ஆஸிட் அடங்கியிருக்கின்றன. குழந்தையின் மென்மையான சருமத்திற்கு உற்சாகத்தையும், சுகத்தையும் கொடுத்து எரிச்சலையும், வேர்க்குருவையும் வரவொட்டாமல் தடுக்கிறது.
பெரிய சைஸ் டின்னை வாங்கிப் பணத்தை மிச்சப்படுத்துங்கள்!
ஓர் கால்கேட்
உயர்ந்த ரகச் சரக்கு!

பண்ணையார் சற்று நேரம் பேசாமல் இருந்தார்.

"சரிதான், சாயங்காலம் வா, யோசித்துச் சொல்லுகிறேன்" என்றார். இதில் யோசிப்பதற்கு என்ன இருக்கிறதோ!

"ஆகட்டும் எஜமான்" என்று சொல்லிவிட்டு நடேசன் கொல்லைப் பக்கம் இருந்த அவன் குடிசையை நோக்கிச் சென்றான்.

பெரிய பண்ணையார் மகன் செல்வராஜன் அவன் பின்னால் மெதுவாக வந்தான்.

"நடேசா! ஊருக்குப் போகிறாயா! எப்போ திரும்பி வருவே!" என்று கேட்டான்.

"நாலு நாளில்வந்து விடுவேன் ராஜா" என்று சிறுவனை அணைத்துப் பிடித்துக் கொண்டான் கிழவன் நடேசன். செல்வராஜன் மேலே ஏதோ சொல்ல வாயெடுத்தான். அவனால் சற்று நேரம் ஒன்றும் பேச முடியவில்லை.

செல்வராஜன் மீது நடேசனுக்கு உயிர். "ராஜா! ராஜா!" என்று சுற்றிச் சுற்றி வருவான். செல்வராஜனும் நடேசனைக் கண்டதும் பசுவைக் கண்ட கன்று போலக் குதித்துக் கொண்டு வருவான். பண்ணையார் எத்தனையோ முறை தடுத்தும் அவனுக்கு நடேசன்மீது இருந்த அன்பு குறையவில்லை. பண்ணையாருக்குத் தெரியுமா, நடேசனுக்கும் செல்வராஜனுக்கும் உள்ள அன்பு. நடேசன் அவர் வீட்டில் வேலை செய்யும் சாதாரண பண்ணையாள். அவனிடம் தம் குழந்தை சரிநிகர் சமானமாகப் பழகுவதா! என்றுதான் நினைத்தார். அவர்மீது குற்றமில்லை. இந்தமாதிரி எண்ணம் இன்று நேற்று வந்ததா! பரம்பரை பரம்பரையாக அவர்கள் இரத்தத்தில் ஊறிக் கிடக்கும் பண்பல்லவா இது!

பண்ணையாரின் மாடி வீட்டுத் தோட்டத்திலேயே ஒரு ஓலைக் குடிசை போட்டுக் கொண்டிருக்கிறான் நடேசன். அவனுக்குக் காவேரி ஒரே பெண். ஏழைமை என்ற ஒரே காரணத்தினாலேயே வந்த வியாதிக்கு வகையான மருந்து கொடுக்க முடியாமல் அகால மரணமடைந்துவிட்டாள் காவேரியின் தாயார். தாயை இழந்த காவேரிக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்து அவளை மார்மேலும் தோள்மேலும் போட்டு வளர்த்து வந்தான் நடேசன். காவேரி சற்றுப் பெரியவளானாள். பேசக் கற்றுக் கொண்டாள். அப்பொழுதெல்லாம் நடேசன் காவேரிக்குச் சின்னச் சின்னக் கதைகளைச் சொல்லுவான். அப்படிக் கதை சொல்லும் போது குழந்தை காவேரி கவனமாகக் கேட்பாள். இன்னும் பெரியவளானாள். இப்பொழுது அவளுக்கு வேறுவிதமான கதைகளைச் சொல்லிவந்தான் நடேசன். அவனுக்கு உடுக்கை அடிக்கத் தெரியும். ஆகையால் உடுக்கையை அடித்துக் கொண்டு தேசிங்குராஜன் கதையைப் பாடுவான். உடுக்கை அடிப்பதை நிறுத்தி ஒரு கையிலிருக்கும் உடுக்கையை உயரத் தூக்கி இன்னொரு கையையும் தலைக்கு மேல் தூக்கி ராகம் இழுப்பான். அந்தக் காட்சி மிக அற்புதமாயிருக்கும்.



"நீங்கள் ரொம்பவும் மனவேதனைப் பட்டுக் கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறதே!"

"ஆமாம், ஸார்! எனக்கு ஏகப்பட்ட மனவேதனைகள். இன்றைக்கு எனக்கு ஏதாவது நேருகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள், அதைப் பற்றி இரண்டு வாரங்களுக்கு முன்னாலிருந்தே வேதனைப்பட ஆரம்பித்து விடுவேன்!"

அப்போதெல்லாம் பண்ணையாரின் மகன் செல்வராஜனும் கூடவே இருப்பான். உடுக்கையின் 'பம் பம்' என்ற இன்ப நாதமும், அதற்கு ஏற்றாற்போல் இருந்த கிழவனின் கணீரென்ற குரலும் சேர்ந்து குழந்தைகள் இருவரையும் மெய்மறக்கச் செய்து விடும். அவர்கள் இருவரும் மலர்ந்த முகத்துடன் மண்டியிட்ட வண்ணம் அவன் பாடிய பாட்டைக் கேட்பார்கள். அந்தக் குழந்தைகளின் மனக் கண் முன்னால் தேசிங்கு ராஜன் குதிரை மீது ஏறி வருவது போல் தோன்றும். அதைப் பார்த்து அப்படியே அசைவற்று இருப்பார்கள். சித்திரப் பாவைபோலிருக்கும் அக் குழந்தைகளைப் பார்க்கும்போது நடேசனுக்கு உண்டாகும் மகிழ்ச்சி அவன் பாடும் பாட்டின் வேகத்திலும், அவன் அடிக்கும் உடுக்கையில் துள்ளும் விரல்களிலும், அவனுடைய தலையாட்டத்திலும், விரிந்து மலர்ந்த விழிகளிலும், உழைத்து உழைத்து உரமேறிக் கிடந்த விம்மும் மார்பிலும் நன்றாகத் தெரியும்.

காவேரி பருவமடைந்த பெண்ணானாள். தன்னுடைய தூரத்து உறவான மாணிக்கத்துக்கு அவளை மணம் முடித்து வைத்தான். காவேரி தன் கணவன் வீடு சென்றுவிட்டாள். நடேசன் சின்னக் குழந்தை போல விம்மி விம்மி அழுதான். எவ்வளவுதான் வயது ஆகியிருந்தும் கூட அவனால் காவேரியைப் பிரிவது அவ்வளவு கஷ்டமாக இருந்தது. மாதம் ஒரு தரம் போய் மகளைப் பார்த்து வருவான். தன் ஓலைக் குடிசைக்குள் தனியாக இருக்கும்போது காவேரியின் நினைவு வந்து விடும். அப்பொழுதெல்லாம் மிகவும் வேதனைப் படுவான். அந்த வேதனையை, அவன் தனிமையைப் போக்கச் சிறுவன் செல்வராஜனின் மழலை மொழியும் கொஞ்சும் குரலும் துணை புரிந்தன. செல்வராஜன் மீது அளவற்ற பிரேமை ஏற்பட்டுவிட்டது. அடிக்கொரு தரம் செல்வராஜனைப் பார்த்துக் கொஞ்சினால்தான் அவன் மனசு அமைதியடையும். செல்வராஜனும் நடேசனின் ஓலைக் குடிசையைத் தேடிப் போய் "நடேசா! எனக்கு ஏதாவது கதை சொல்லு" என்று கேட்பான்.

நடேசனும் தனக்குத் தெரிந்த கதைகளை எல்லாம் அவனுக்குச் சொல்லுவான். குழந்தை செல்வராஜனுக்குத் தன் மெத்தை வீட்டின் பஞ்சணை மெத்தையை விட நடேசனின் ஓலைக் குடிசையின் களிமண் தரையே ரொம்பப் பிடித்திருந்தது. அந்தக் களிமண் தரையில் நடேசனின் கதைகளைக் கேட்டுக் கொண்டே தூங்குவதில்தான் அவனுக்குப் பிரியம் அதிகம்.

செல்வராஜனுக்கு நடேசன் வீரன் கட்டபொம்மனின் கதையைச் சொல்லுவான். அவனுடைய தியாக வாழ்க்கையையும், சோக சரித்திரத்தையும் வசனமாகச் சொல்லுவான்; பாட்டாகவும் பாடுவான். செல்வராஜன் திறந்த வாய் மூடாமல் அதைக் கேட்டுக் கொண்டிருப்பான்.

இடமென்று நடேசனுக்கு உற்சாகம் பிறந்து விடும். கையில் உடுக்கையை எடுத்து அடித்துக் கொண்டு தேசிங்கு ராஜன் பாட்டை ஆடிக் கொண்டே பாடுவான். செல்வராஜன் கிழவனின் ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டே தன் குமுத வாயைத் திறந்து சிரிப்பான்.

அதைப் பார்த்தவுடன் நடேசன் இந்த உலகத்தையே மறந்து விடுவான். வான வெளியில் இன்பக் குதிரையில் ஏறிப் பறக்க ஆரம்பித்து விடுவான். பாட்டு முடிந்தவுடன் உடுக்கையைக் கீழே வைத்துவிட்டு உட்காருவான். செல்வராஜன் ஆசையோடு சென்று அவன் தோளைக் கட்டிக் கொள்ளுவான். சிறுவனின் அன்பு நிறைந்த அணைப்பிலே அவன் தன் கவலை எல்லாவற்றையும் மறந்து விடுவான்.

பண்ணையாருக்கும் நடேசன் மீது நல்ல நம்பிக்கை. அவனை நம்பி மாடு கன்று, நில புலன் எல்லாவற்றையும் விட்டுவிட்டு நிம்மதியாக இருந்தார். அவனும் வஞ்சகமில்லாமல் அவருக்கு உழைத்து வந்தான். அதனால்தான் அவன் ஊருக்குப் போகிறேன் என்றவுடன் அவருக்குக் கவலை.

சிறுவன் செல்வராஜனோ கிழவனை ஒரு வாரத்துக்குப் பார்க்க முடியாதே என்று ஏக்கப்பட்டான். அதனாலேயே ஏதோ சொல்ல வந்தவன் அப்படியே திகைத்து நின்றுவிட்டான்.

அவனுடைய ஏக்கம் சோர்ந்துபோன அவன் இளம் முகத்தில் தெரிந்தது. ஆத்திரத்தால் துடிக்கும் அவன் உதடுகளில் தெரிந்தது. நீர் நிறைந்த கண்களில் தெரிந்தது. இன்னும் அவன் தள்ளாடியபடி நின்ற நிலையிலேயே தெரிந்தது.

கிழவனால் அந்தச் சோகக் காட்சியைப் பார்க்க முடியவில்லை. அவனுடைய குழி விழுந்த கண்களும் கலங்க ஆரம்பித்து விட்டன.

"ஊருக்குப் போனால் என்னை மறந்து விடுவாயோ!" என்று தன் ஆத்திரத்தை யெல்லாம் அடக்கிக்கொண்டு கேட்டான் செல்வராஜன்.

"என் ராஜாவை நான் மறப்பேனா! ஒருக்காலும் மறக்க மாட்டேன்!" என்று தழ தழத்த குரலில் கூறிவிட்டுக் குழந்தையை மீண்டும் ஒரு முறை அணைத்துக் கொண்டான்.

* * *

**மா**லை நெருங்கிக் கொண்டிருந்தது. தூங்கிக் கொண்டிருந்த பண்ணையார் யாரோ கூப்பிடும் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தார். எதிரில் கிழவன் நடேசன் நின்று கொண்டிருந்தான். கூனிக் குறுகிக்கொண்டு அவன் நின்றுகொண்டிருந்த காட்சி பரிதாபமாக இருந்தது. சில விநாடிகள் பண்ணையார் அவனையே பார்த்தார். கிழவன் நடேசனின் சுருக்கம் விழுந்த முகத்தில் எதையோ எதிர்பார்க்கும் ஆவல் நிறைந்திருந்தது. அவன் தன் கையில் வைத்திருந்த துணி மூட்டையைக் கீழே வைத்தான். பண்ணையாரைக் கையெடுத்துக் கும்பிட்டான்.

"ஏண்டா, இன்றைக்கே போக வேண்டியது தானா!" என்று கேட்டார் பண்ணையார்.

"ஆமாம், எஜமான்!" என்றான் கிழவன்.

பண்ணையார் எழுந்து பேசாமல் உள்ளே சென்றார். ஐந்து வெள்ளி ரூபாயைக் கொண்டு வந்து அவன் கையில் கொடுத்தார். பண்ணையாரின் பாசி படிந்த உள்ளத்தைப் போலவே ரூபாய்களும் பாசி படிந்திருந்தன. எத்தனை காலத்துக்கு முன் யார் சேர்த்து வைத்த பணமோ அது!

"இரண்டு மூன்று நாளைக்குள்ளாகவே திரும்பி வந்துவிடு" என்றார் பண்ணையார்.

"காவேரிக்குக் குழந்தை பிறக்கும் வரையில் கூட இருக்கப் போவதில்லை. ஒரு வாரத்துக்குள்ளாகவே திரும்பி வந்துவிடுகிறேன்" என்றான்.

"சரி, போய்விட்டுவா!" என்றார் பண்ணையார்.

கிழவன் மீண்டும் ஒரு கும்பிடு போட்டுவிட்டுக் கிளம்பினான். அவன் போவதைப் பார்த்துக் கொண்டே இருந்தார் பண்ணையார். அக்கிழவன் ஊருக்குப் போவது அவருக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. மாடு கன்றுகளையும் வயல் வெளியையும் நினைத்து வேதனைப் பட்டார். பாவம், காலமெல்லாம் உழைக்கும் ஒரு பண்ணையாள் சேர்ந்தாற்போல் ஒரு வாரம் ஊருக்குப் போவதற்குக் கூடச் சுதந்திரமில்லை. கிழவன் தன் மகள் பிரசவத்துக்காகப் பத்து ரூபாய் கேட்டதற்கு ஐந்து ரூபாய்தான் கொடுத்தார். அதையும் அவர் என்ன நினைத்துக் கொண்டு கொடுத்தாரோ! அவன் பண்ணையாளாக இருந்தால் அவனுக்கு மட்டும் ஆசாபாசங்கள் கிடையாதா! இல்லை, இருக்கத்தான் கூடாதா! அவனுடைய உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுக்கும் அளவுக்குப் பண்ணையார் மனத்தில் பண்பு இல்லையே!

ஒருவன் ஏழையாக இருந்தால் அவனுக்கு மகள் இருக்கக் கூடாதா! அவளுக்குக் குழந்தை பிறக்கக் கூடாதா! பண்ணையார் தம் மகள் பிரசவத்தின் போது பட்டபாடு, எடுத்துக் கொண்ட சிரமம், அடாடா! இப்படி அப்படி என்றில்லை. பெரிய பெரிய டாக்டர்கள் வந்தனர், உறவினர்கள் வந்தனர், ஊரே வந்து விசாரித்தது. இவைகளை நினைத்துப் பார்த்தாவது கிழவன் நடேசனுக்குப் பத்து ரூபாய் கொடுத்திருக்கக் கூடாதா! மனதார அவனை "ஊருக்குப் போய் வா" என்று சொல்லி அனுப்பி இருக்கக் கூடாதா!

"நடேசா! நடேசா!" என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்டது. கிழவன் திரும்பிப் பார்த்தான்.

சிறுவன் செல்வராஜன் ஆட்டுக் குட்டியைப் போலத் துள்ளிக் குதித்து ஓடிவந்தான். கையிலிருந்த மூட்டையைக் கீழே போட்டு விட்டு செல்வராஜனைக் குனிந்து தூக்கிக் கொண்டான்.

"ஊருக்குப் போனால் என்னை மறந்து விடமாட்டாயே!" என்று கொஞ்சும் குரலில் கேட்டான் குழந்தை செல்வராஜன்.

"மறக்க மாட்டேன் ராஜா. உன்னை நான் மறந்து விடுவேனா!" என்று சொல்லிக் குழந்தையைக் கீழே விட்டு விட்டுத் துணி மூட்டையை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டான்.

குழந்தை செல்வராஜனும் ஒரே ஓட்டமாக வீட்டுக்கு ஓடிப் போய்விட்டான்.

அவன் வீடு செல்லும்வரை அங்கேயே நின்று பார்த்து விட்டுக் கிழவன் ரயிலடியை நோக்கி நடந்தான். அவன் அருமை மகள் காவேரியின் நினைவு அவன் மனத்தில் தோன்றியது. அவளைக் காணப் போகிறோம் என்ற ஆசையில் அவன் நடை கொஞ்சம் வேகமாக இருந்தது. கிழவன் நடேசனுக்குச் சுற்றியுள்ள யாவும் புதுமை பெற்று விளங்கின. "காவேரியைப் பார்த்ததும் பம்பளிமாஸ் பழம் கொடுப்பேன். அவள் அதை ஆசையோடு வாங்கித் தின்பாள். கட்டபொம்மன் பாட்டைப் பாடச் சொல்லுவாள். நானும் அதைப் பாடுவேன்" என்றெல்லாம் அவன் அன்பு உள்ளம் எண்ணியது. அவன் கால்கள் ரயிலடியை நோக்கிச் செல்லும் சாலையில் சென்றன.

மாலை மறைந்து இரவு நெருங்கி விட்டதால் வானம் கருத்துக்கொண்டிருந்தது. அதன் நடுவே செந்நிற மேகங்கள் வரிசை வரிசையாகக் காணப்பட்டன. அது ஏதோ ஒரு அபாய அறிவிப்புப் போலத் தோன்றிக் கொண்டிருந்தது. *(தொடரும்)*

# ஆதார சக்தி



நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

தினசரி போஜனத்திற்குப் பிறகு ருசிகரமான வாட்டர்பரீஸ் காம்பவுண்டும் சாப்பிட்டு வந்தால் சொற்பகாலத்திலேயே தென்பும் திடமும் அதிகரிப்பதை காண்பீர்கள். தேக உறுப்புகளுக்கு வலுவூட்ட அவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் உங்களுடம்பில் திராணி அதிகரிக்கச் செய்யும். களைப்பேற்படாமல் தென்பூட்டி ஜலதோஷம், இருமல் வராமலிருக்க அதிக எதிர்ப்பு சக்தியும் பெற உதவுகிறது. இளையோர், முதியோர் யாவருக்கும் சிறந்த ஆரோக்கிய டானிக்.




**WATERBURY'S**

**COMPOUND**

வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் தென்புடன் வைத்திருக்கும்

NAS 737

# பயம் தெளிந்தது

## சரோஜா சீனிவாசன்

"இன்றைக்காவது நீங்கள் கட்டாயம் சொல்லித்தான் ஆகணும்! எத்தனை நாளைக்கு என்னை இப்படியே ஏமாற்றப் போகிறீர்கள்!" என்று ஏமாற்றம் நிறைந்த குரலில் கேட்டாள் ஜானகி.

"உன்னை ஏமாற்ற வேணும் என்ற எண்ணமே எனக்குக் கிடையாது ஜானு! நானும் எத்தனையோ தடவை முயற்சி பண்ணித்தான் பார்த்தேன். எதுக்கும் சமயம் வரவேண்டாமா!...... எனக்கு மாத்திரம் உன்னோடு சேர்ந்து போட்டோ எடுத்துக்கவேணும் என்ற ஆசை கிடையாதா! நீயே சொல்லு......" என்றான் மூர்த்தி.

"உங்களுக்கு ஆசையில்லை என்று நான் சொல்லவில்லை. இருந்தாலும் அதில் ஏன் சிரத்தை யில்லாமல் தட்டிக் கழிக்கிறீர்கள்! நானும் இந்த பத்து மாதங்களாக உங்களை நச்சரித்துக் கொண்டு வருகிறேன். ஆகட்டும் ஆகட்டும் என்று சொல்லுகிறீர்களே ஒழிய அதைச் செய்யமாட்டேன் என்கிறீர்களே!" என்றாள் விம்மும் குரலில். அவள் கண்களில் ததும்பிக் கொண்டிருந்த கண்ணீர் கீழே விழத் துடித்துக் கொண்டிருந்தது.

ஜானகியின் கண்ணீரைக் கண்ட மூர்த்தி திடுக்கிட்டுப் போனான். ஜானுவின் குழந்தை உள்ளத்தை எண்ணி அவன் மனம் பாகாய் உருகிற்று.

"ஜானு! அசடு! இதோ பார்! காரணம் தெரியாமல் அழுகிறாயே. இத்தனை தூரம் இதை பிரமாதப் படுத்துவாய் என்று தெரிந்தால் என்றைக்கோ போட்டோ எடுத்துக் கொண்டிருக்கலாமே. உன்னைத்தான் எப்பவும் எதிரிலேயே பார்த்துக் கொண்டு இருக்கேன். நீயும் என்னைப் பார்த்துக் கொண்டு இருக்கிறாய். ஒருவரை ஒருவர் உள்ளத்தோடு உள்ளமும் நேருக்கு நேராய்ப் பார்க்கும்பொழுது போட்டோவுக்கு அவசியம் என்ன! போட்டோ எடுத்துக் கொள்ளாததினாலே எனக்கு உன்னிடம் அன்பு இல்லை என்று அர்த்தமா!" என்று ஜானகியை அணைத்தபடியே கனிவுடன் கேட்டான்.

மூர்த்தியின் பரிவான பேச்சும் அன்புக் கரங்களின் அணைப்பும் ஜானகிக்கு ஆறுதலா யிருந்தது.

"நான் அந்தமாதிரி செய்யவில்லை. எனக்கு என்னவோ நாம் இருவரும் போட்டோ எடுத்துக் கொள்ள வேணும் என்று ஆசை. அந்த ஆசையைப் பூர்த்தி செய்வீர்கள் என்று நம்பிக்கையுடன் இருந்தேன். ஆனால் இன்று வரை அந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் தாங்கள் அசிரத்தையுடன் இருப்பதைக் கண்டு மனம் வருத்தமாயிருக்கிறது" என்றாள் ஜானகி.

"ஜானு நீ படித்த பெண். என் மனத்தில் புகைந்து கொண்டிருக்கும் வேதனையின் ரகசியம் என்னுள்ளேயே மடிந்து போக நான் விரும்பவில்லை. உன்னிடம் சமயம் வரும்போது சொல்லுகிறேன். வீணாக வருத்தப்படாதே! போட்டோ எடுத்துக் கொள்ளுவது என்பது என் வரையில் மனத்தில் விரக்தியையும் கசப்பையும் ஏற்படுத்தி விட்டது. இந்த வீட்டுக்கே அது ஆவி வராமல் போய்விட்டது. அதனால் அந்த ஆசை என்னுள் கருகிப் போய்விட்டது. இன்று நீ அதை புத்துயிர் பெறச் செய்கிறாய். இருந்தாலும் உன் ஆசையை எப்படியும் இரண்டு நாட்களில் நிறைவேற்றி வைக்கிறேன். நிச்சயம் இந்த முறை ஏமாற்ற மாட்டேன்" என்றான் திடமான குரலில்,

அவன் குரலில் காணப்பட்ட உறுதியையும் உற்சாகத்தையும் கண்ட ஜானகி சந்தோஷத்தில் மான் போல் துள்ளிக் குதித்துக் கொண்டு உள்ளே ஓடினாள்.

அவள் போவதையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான் மூர்த்தி. "ஜானு! ஜானு! நீ ஏன் இன்னமும் இவ்வளவு குழந்தையாயிருக்கிறாய்!" என்று அவன் வாய் முணு முணுத்தது. அதே சமயம் அவன் கண்கள் ஹாலில் மாட்டியிருந்த கௌரியின் போட்டோவைப் பார்த்தன.

* * *

மூர்த்தி கௌரியைக் கைபிடித்துக் கல்யாணம் செய்து கொண்ட போது அவனுக்கு வயது இருபத்து நான்குதான். இயற்கையிலேயே மூர்த்தி வாட்ட சாட்டமான உருவமும் அழகும் உடையவன். பெரிய கம்பெனி ஒன்றில் கை நிறைய சம்பளம் வாங்கிக்கொண் டிருந்தான். மூர்த்தியின் அழகையும், உத்தியோகத்தையும் கண்டுதான் மிராசுதார் நாகநாதன் தன் ஒரே பெண் கௌரியை மூர்த்திக்குக் கொடுத்தார். கௌரி நல்ல சிவப்பு; கொடி போன்ற தேகம்; களையான முகம்; குறுகுறுத்த விழிகள்; கல கல வென்ற சுபாவம். அழகும் அதிர்ஷ்டமும் அந்தஸ்தும் இருந்தன. கேட்க வேண்டுமா! மூர்த்தியும் கௌரியும் ஜோடி அமைந்ததைப் புகழாதவர்களே கிடையாது.

இளம் வயதிலேயே பெற்றோரை இழந்த மூர்த்தி சுய முயற்சியாலேயே படித்து முன்னுக்கு வந்தவன். அவன் சுய காரியங்களில் தலையிடவோ பெரியவர்கள் என்று சொல்லிக் கொண்டு அவன் வார்த்தைகளுக்குத் தடை கூறவோ உறவினர்கள் யாரும் கிடையாது. அவனுக்கு அவனே ராஜா. அதனால் கல்யாணம் ஆனவுடன் தன் இஷ்டப்படி கௌரியைக் கையோடு அழைத்துக் கொண்டு வந்து தனிக் குடித்தனம் நடத்த ஆரம்பித்தான். மிராசுதார் நாகநாதனுக்கும் இதில் பரிபூர்ண சம்மதந்தான். குழந்தைகள் சந்தோஷமாக வாழ்க்கை நடத்துவதைக் கண்டு திருப்தி அடைந்தார்.

மூர்த்தியும் கௌரியும் தனிக் குடித்தனம் நடத்த ஆரம்பித்து மூன்று மாதங்கள் விளையாட்டுப் போல ஓடி மறைந்து விட்டன. வாழ்க்கை அவர்களுக்கு இன்பப் பூஞ்சோலையாக இருந்தது. சிரிப்பும், கொம்மாளமும், விளையாட்டுமாகக் கழிந்தன நாட்கள். தினந்தோறும் சாயங்காலத்தில் அவர்கள் இருவரும் ஜோடியாக சினிமாவுக்கோ, பீச்சுக்கோ, சங்கீதக் கச்சேரிக்கோ போகத் தவறுவது கிடையாது. இரவு நேரத்தில் மொட்டை மாடியில் பால்போல் வீசும் நிலவில் அவர்கள் அடிக்கும் அரட்டைப் பேச்சுகளுக்கும், விளையாட்டுகளுக்கும் அளவில்லை. மொத்தத்தில் மூர்த்தியும் கௌரியும் நடத்திய வாழ்க்கை ஆனந்த வாழ்வாக இருந்தது.

கல்யாணத்திலிருந்து மூர்த்தியும் கௌரியும் சேர்ந்து போட்டோ எடுத்துக் கொள்ள முடியாதபடி ஏதாவது அசந்தர்ப்பங்கள் ஏற்பட்டுக் கொண்டே இருந்தன. அதனால் அன்று கௌரியின் ஆசைப்படி எப்படியும் போட்டோ எடுத்துக் கொள்வதென்று தீர்மானித்து ஒரு போட்டோ ஸ்டுடியோவுக்குப் போய்ப் போட்டோ எடுத்துக் கொண்டனர். அவன் நினைத்ததுபோல் இல்லாமல் போட்டோ திருஷ்டி விழுந்துவிடும் போல் ஜோராக அமைந்திருந்தது. முதல் காரியமாக போட்டோவுக்குப் பிரேம் போட்டு அதை

அலங்காரமாக நடு ஹாலில் மாட்டிய பிறகு தான் அவளுக்குத் தூக்கம் வந்தது.

*　　　*　　　*

**நா**ன்கு மாதங்கள் ஓடி மறைந்தன. கௌரி இப்போது தாய்மையை எட்டிக் கொண்டிருந்தாள். அவளுக்கு இது ஏழுமாதம். பருவம் அவளைப் பரிபூர்ணமாகத் தழுவிக் கொண்டிருந்தது. அழகை அள்ளி வீசிக்கொண்டிருந்தது. மூர்த்தியும் கௌரியும் எதிர்கால இன்பக் கனவுகளில் மூழ்கி, அதற்கானத் திட்டங்களை உருவாக்கிக் கொண்டிருந்தனர். தகப்பனாகப் போகும் பெருமையில் மூர்த்தி தலை நிமிர்ந்து நடந்தான்.

ஒரு நாள் இரவு. நிர்மலமான நீலவானிலே நிலா தங்கத் தகடுபோல் ஒளி வீசிக்கொண்டிருந்தது. மொட்டை மாடியிலே மூர்த்தி சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தான். அவன் அருகில் தரையில் அமர்ந்திருந்தாள் கௌரி. வெற்றிலை போட்டதினால் ரத்தம் போல் சிவந்திருந்த அவள் உதடுகள் அவள் முகத்தின் சோபையை அதிகப்படுத்திக் காட்டிற்று. ரோஜா இதழ் போன்ற கன்னங்களில் செம்மை படர்ந்திருந்தது. அவள் அழகை ரசித்தபடியே கண் கொட்டாமல் அவளைப் பார்த்தான் மூர்த்தி.

"எனக்கு ரொம்ப நாளா ஒரு ஆசை. கேட்டால் பூர்த்தி செய்வீர்களா!" அவள் குரலில் குழைவு தொனித்தது.

"நீ கேட்டு நான் மாட்டேன் என்று சொல்லியிருக்கேனா கௌரி. என்ன ஆசை! கேளு!"

"நம்முடைய அந்த போட்டோவை பெரிசாக 'என்லார்ஜ்' பண்ணி நடுஹாலிலே அழகாக மாட்ட வேணும்......"

"இதென்ன அசட்டு ஆசை கௌரி! போட்டோவை ஏன் என்லார்ஜ் பண்ணணும்! அதுவே போதும்!" என்று சொன்னான்.

"என்னமோ எனக்கு அல்பாயுசுன்னு எங்க அத்தை சொல்லிக் கொண்டிருப்பார்கள். ஒரு கால் எங்க அம்மாவைப் போல் இந்த வயசிலேயே நானும் போய் விட்டால் என்ன பண்ணுவது! அதைத் தடுத்து என் உயிரைக் காப்பாற்ற உங்களால் முடியுமா! அதனால் தான் அந்தப் படத்தை 'என்லார்ஜ்' பண்ணிப் பார்க்கணும் என்று ஆசைப் படுகிறேன்" என்றாள். அவள் குரலில் பரிகாசம் தொனித்தது.

அவள் வார்த்தைகள் மூர்த்திக்குச்சொரேர் என்று உள்ளத்தில் பாய்ந்தன. கௌரி பரிகாசத்துடனோ அல்லது உண்மையாகவோ கூறிய வார்த்தைகளில் ஏதோ பயங்கரம் மறைந்து இருப்பதாக அவன் உணர்ந்தான். அவள் வாக்கு ஒருகால் பலித்துவிட்டால்...! நினைத்துப் பார்த்த மூர்த்தியின் நெஞ்சு நடுங்கிற்று. பதில் பேசாது செயலிழந்து நின்றான்.

"என்ன பயந்து போய் விட்டீர்களா! பிரமை பிடித்ததுபோல் உட்கார்ந்திருக்கிறீர்களே! விளையாட்டுக்குச் சொன்னதை அப்படியே நிஜம் என்று நம்பிவிட்டீர்களே! அப்படியெல்லாம் நான் ஒண்ணும் செத்துப் போய்விட மாட்டேன்" என்று சொல்லியபடி மூர்த்தியின் தோளைக் குலுக்கினாள். மூர்த்தி அவளை ஏறிட்டுப் பார்த்தான். அவன் பார்வையிலே ஒரு பயமும் சூழ்ந்திருந்தது.

"கௌரி நீ இன்னொரு முறை இதுமாதிரி பேசினால் எனக்குக் கெட்ட கோபம் வரும். ஏதோ விபரீதத்துக்குத்தான் நீ இப்படி எல்லாம் பேசுகின்றாய். இன்றைக்கு நாம் மாடிக்கு வந்த வேளையே சரியில்லை. கீழே வா போகலாம்" என்று இறங்கிப் போனான்.

அன்று முதல் மூர்த்தியின் மனம் நிம்மதியின்றித் தவித்தது. கௌரியின் அசட்டு வார்த்தைகள் அவன் உள்ளத்தில் சதா உறுத்திக் கொண்டே இருந்தது. ஆனாலும் கௌரியின் தொந்தரவுக்கும் ஆசைக்கும் விட்டுக் கொடுக்கவேண்டியதாயிற்று. இரண்டு நாளில் போட்டோவை என்லார்ஜ் பண்ணிக் கொண்டு வந்தான். தான் விளையாட்டாகக் கூறிய வார்த்தைகளால் மூர்த்தியின் உள்ளம் எத்தனை தூரம் கலங்கிப் புண்பட்டிருக்கிறதென்று உணராத கௌரி சந்தோஷத்துடன் போட்டோவை ஹாலில் மாட்டி மனமகிழ்ந்தாள்.

வளைகாப்பு சீமந்தம் ஆன கையோடு பிரசவத்திற்காக நாகநாதன் கௌரியை அழைத்துக் கொண்டு ஊருக்குப் போனார். உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளும்படியும் அடிக்கடி கடிதம் போடும்படியும் பன்முறை கௌரியிடம் சொல்லிப் பிரிய மனமில்லாது அனுப்பினான் மூர்த்தி.

அன்று ஞாயிற்றுக் கிழமை. ஏதோ யோசனையில் ஆழ்ந்தபடி ஈஸிசேரில் படுத்துக் கொண்டிருந்தான் மூர்த்தி. "ஸார்! தந்தி!" என்ற குரல் மூர்த்திக்கு அடி வயிற்றில் நெருப்பு வைத்தமாதிரி இருந்தது. நடுங்கும் கரங்களுடன் தந்தியை வாங்கி உடைத்துப் படித்தான். "கௌரி அபாய நிலையில் இருக்கிறாள். பிரசவக் கோளாறு உடனே வருக. நாகநாதன்." தன் தலையில் எரிமலையே புரண்டு விழுந்தாற் போல் உணர்ந்தான் மூர்த்தி. "ஐயோ!" என்று அலறக் கூட அவன் நெஞ்சில் ஜீவன் இல்லை. மறு ரயிலிலேயே காற்றாய்ப் பறந்தான். ஆனால் கௌரியின் கடைசி மூச்சிலே தான் அவளைச் சந்திக்க முடிந்தது.

"வந்துவிட்டீர்களா! நீங்கள் சொன்னபடியே, பயந்தபடியே, கடைசியில் முடிந்துவிட்டது...... நான் கொடுத்து வைக்கவில்லை......" திக்கித் திணறினாள் கௌரி. மறுகணம் அவள் ஆவி பறந்து



விட்டது. மூர்த்தியால் இந்த அதிர்ச்சியைத் தாங்கவே முடியவில்லை. பைத்தியம் பிடித்த மனோ நிலையில் வீட்டை விட்டுக் கிளம்பினான். ஆனால் விதி என்று ஒன்று இருந்து எல்லாரையும் பலவிதமாக ஆட்டுவிக்கிறதே, அது மூர்த்தியின் வாழ்விலும் குறுக்கிட்டது.

பெங்களூரில் இருந்த கிளைக் காரியாலயத்துக்கு முக்கிய ஆபீஸ் விஷயமாக மூர்த்தி போக நேரிட்டது. போன இடத்தில் மானேஜர் சாம்ப மூர்த்தி வீட்டில் தங்க நேர்ந்தது. அங்கு தான் சாம்பமூர்த்தியின் பெண் ஜானகியைக் கண்டு மூர்த்தி ஒரு கணம் ஆச்சரியத்தில் ஸ்தம்பித்துப் போனான். ஏன் திடுக்கிட்டுக் கூடப் போனான். இரண்டு வருஷங்களுக்கு முன் தன்னை விட்டுப் பிரிந்து போன தன் ஆருயிர் கௌரிதான் புனர் ஜன்மம் எடுத்து வந்திருக்கிறாளோ என்று நினைத்துச் சந்தேகப்பட்டான்.

சாம்பமூர்த்திக்கு மூர்த்தியைப் பார்த்தவுடனேயே பிடித்துவிட்டது. அவனிடம் காணப்பட்ட அடக்கம், பணிவு, அழகு எல்லாமே அவரை வசிகரித்து விட்டது. மூர்த்தியிடம் நேரிலேயே தன் மனதிலுள்ளதைக் கேட்டு எல்லா விஷயங்களையும் அறிந்து கொண்டார். ஜானகியை மூர்த்திக்கு இளையாளாகக் கொடுக்கச் சம்மதித்தார். கல்யாணத்தை விமரிசையாக நடத்தி ஜானகியின் மூலம் மூர்த்தியின் வாழ்வில் பழைய மலர்ச்சியை ஏற்படுத்தினார்.

ஜானகியுடன் இன்ப வாழ்வு நடத்தினான். ஜானு வந்ததற்காக ஹாலில் மாட்டியிருந்த கௌரியின் போட்டோவை மூர்த்தி கழற்றவில்லை. ஜானகியும் அதைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. போட்டோவைப் பார்க்கும்போதெல்லாம் மூர்த்தின் மனம் கௌரியைப் பற்றி நினைக்கத் தவறவில்லை.

* * *

ஆனால் இன்று!...... மூர்த்தி சிந்தனை கலைந்தான். அவன் உள்ளத்தில் சலனம் ஏற்பட்டுவிட்டது. கௌரியின் மறைவுக்கு அந்தப் பாழும் போட்டோதான் எமனாக இருந்தது என்று மூர்த்தி காரணம் கற்பித்துக் கொண்டான். அதே எண்ணத்தில் ஜானகியையும் இழந்து விடுவோமா என்ற பயத்திலேயே மூர்த்தி இன்றுவரை ஜானகியுடன் போட்டோ எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் ஜானகியின் வற்புறுத்தலுக்கும், கண்ணீருக்கும் மூர்த்தி விட்டுக் கொடுக்க வேண்டியிருந்தது. தன் அன்பின் அடையாளமாக அவள் தாங்கி நிற்கும் தாய்மை நிலையும் அவன் மனத்தை மாற்றிவிட்டது.

ஜானகியின் மனோரதம் ஈடேறிவிட்டது. இன்று மூர்த்தி—ஜானகி போட்டோ ஹாலில் இடம்பெற்றிருந்தது. தங்கள் போட்டோவைக் கௌரியின் போட்டோ அருகிலேயே மாட்டி மனம் மகிழ்ந்தாள் ஜானகி. ஆனால் மூர்த்தியின் மனம் சங்கடப்பட்டுத் தவித்துத் தத்தளித்தது.

மூர்த்தியிடம் காணப்பட்ட மாறுதலையும் போக்கையும் கண்டு ஜானகி பயந்து போனாள். "ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்! கலகலப்பாக இல்லையே!" என்று பரிவுடன் கேட்டாள்.

மூர்த்தி தன் மனத்தில் புகைந்து கொண்டிருந்த வேதனையை வார்த்தைகளாக ஜானகியிடம் கொட்டித் தீர்த்தான். "ஜானு! நீயும் என்னை ஏமாற்றி விட்டுப் போய்விட மாட்டாயே ...... போய்விட மாட்டாயே!" என்று அரற்றினான் மூர்த்தி.

கௌரியைப் பற்றி மூர்த்தி கூறியதைக் கேட்டு ஜானகி ஒரு கணம் அசந்து போனாள். ஆனால் அவள் புத்திசாலி. நல்ல சாமர்த்திய சாலி. மறு கணமே தன்னைச் சமாளித்துக்கொண்டு விட்டாள்.

"ஏன் வீணாக மனசை அலட்டிக் கொள்கிறீர்கள்! கௌரி அக்காவுக்கு ஆயுசு இல்லை. போய்விட்டாள். போட்டோ ஆவி வரவில்லை என்கிற குருட்டு நம்பிக்கையை விட்டு விடுங்கள்" என்று உணர்ச்சி வசத்தில் பேசினாள் ஜானகி.

ஜானகியினுடைய திடமனதும், அவள் பேச்சில் காணப்பட்ட உண்மையும், கலக்கமற்ற உள்ளமும் மூர்த்தியை ஆச்சரியத்தில் ஆழ்த்திற்று. அவன் மன சஞ்சலம் நீங்கிற்று.

ஜானகி பிரசவத்துக்கு ஊருக்குப் புறப்பட்டுப் போய்விட்டாள். போகும் பொழுதுகூட மூர்த்திக்குத் தைரியம் சொல்லிவிட்டுத்தான் போனாள்.

* * *

ஜானகி ஜன்னியில் வாயில் வந்தபடியெல்லாம் பிதற்றிக் கொண்டிருந்தாள். அவள் படுக்கையில் கலங்கிய உள்ளத்துடன் அமர்ந்திருந்தான் மூர்த்தி. "ஜானு! ஜானு! ஒரு மாணிக்கத்தை இழந்த நான் மற்றொரு மாணிக்கத்தையும் இழக்கப் போகிறேன்..." என்று கதறினான்.

"நீங்கள் சொன்னது சரியாப் போச்சு. நானும் கௌரி அக்காவோடு போகிறேன். அந்தப் பாழும் போட்டோ...தரித்திரம் பிடித்த சனியன். அதைச் சுக்கு நூறாக உடைத்து எறியுங்கள். வாழ்வைக் குலைத்த எமன். இனிமேல் போட்டோவே வேண்டாம்..." குழறியபடியே சொன்னாள் ஜானகி. அவள் கண்கள் மலர விழித்தன. மூர்த்தி பைத்தியம் பிடித்தவன் போல் ஓடினான். உன்மத்தம் பிடித்தவனைப் போல் படங்களைக் கழற்றினான். "உடையட்டும்...தொலையட்டும். இனி என் கண்ணிலே படவேண்டாம்" என்று ஆவேசம் வந்தவனைப் போல் படங்களைத் தூக்கி விசிறித் தரையில் எறிந்தான். 'மடேர்' என்ற சத்தத்துடன் படம் தரையில் மோதி உடைந்து சுக்கு நூறாகச் சிதறியது அவன் உள்ளத்தைப் போல்.

அலறி அடித்துக் கொண்டு எழுந்தான் மூர்த்தி. அவன் உடலெங்கும் வியர்வை ஆறாகப் பெருகிற்று. அவன் உள்ளமும் உடலும் படபடவென்று நடுங்கியது. படபடப்பு அடங்க அவனுக்கு ஐந்து நிமிஷங்கள் ஆயிற்று. அப்பாடா! நல்ல வேளை! எல்லாம் கனவுதானே. புத்தகம் படித்துக் கொண்டிருந்தவன் அப்படியே தூங்கிப் போயிருக்கிறேன்.

"ஸார் போஸ்டு!" என்று சொல்லியபடியே ஒரு கார்டை வீசி எறிந்து விட்டுப் போனான் தபால்காரன். ஆவலும் பரபரப்பும் மேலிட ஓடிப் போய் எடுத்தான் மூர்த்தி. கடிதத்தின் நான்கு ஓரங்களிலும் மஞ்சள் தடவி இருந்தது.

"மாப்பிள்ளைக்கு அநேக ஆசிர்வாதம். ஜானகி பிரசவித்துப் பெண் குழந்தை பிறந்திருக்கு. மூன்று நாளாகிறது. தாயும் குழந்தையும் சௌக்கியம். இப்படிக்கு, சாம்பமூர்த்தி."

சம்பிரதாயப்படி மூன்றும் நாள் கடிதம் போட்டிருந்தார் மனுஷர். கடிதத்தைப் படித்த மூர்த்தி சந்தோஷத்தில் ஒரு துள்ளுத் துள்ளினான். அவனையும் அறியாமல் அவன் கண்கள் போட்டோவைப் பார்த்தன. சாந்தம் தவழும் முகத்துடன் கௌரி தன் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்ளும் பாவனையில் அவனைப் பார்த்துப் புன்னகைப் பூப்பது போல் தோன்றிற்று.

அன்று இரவு புறப்பட்ட பெங்களூர் மெயிலில் ஜானுவைப் பற்றியும், 'சின்ன கௌரி'யைப் பற்றியுமான இன்பக் கனவுகளில் நினைத்தபடியே பெங்களூருக்குப் போய்க் கொண்டிருந்தான் மூர்த்தி.

# நீங்கள் இன்று உங்கள் பற்களை **மக்ளீன்** செய்தீர்களா?



"நான் எப்பொழுதும் மக்ளீன்ஸ் உபயோகிக்கிறேன். ஏனெனில் அது என் பற்களை வெண்மையாகவும் பளபளப்பாகவும் இருக்கச் செய்கிறதென்று என் தாய் சொல்கிறாள்."

அவள் செய்து ரசிக்கிறாள். அவளது பிரகாசமான புன்னகையைப் பாருங்கள்! பளபளப்பும், ஆரோக்கியமும், மிளிரும் பற்களை பாருங்கள். மக்ளீன் பெராக்ஸைட் பற்பசையால் தினமும் இரண்டுதரம் அவள் சுத்தம் செய்து கொள்ளுகிறாள்.

மக்ளீன் பெராக்ஸைட் பற்பசை உங்கள் ஈறுகளை ஆரோக்கியமாகவும், பற்களை வெண்மையாகவும், ஒரே சமயத்தில் விளங்கும்படி செய்கிறது. அதனால்தான் உலகிலுள்ள லக்ஷக்கணக்கான புத்திசாலித்தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு தினமும் இரண்டு தடவை மக்ளீன் பற்பசையினால் பற்களை சுத்தம் செய்யும்படி கூறுகின்றனர்.

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குக!**




MTY-1 TAM

வியாபார விவரங்களுக்கு: ஜே.எல்.மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 24. அஸ்வினி முத்ரா

“அஸ்வம்” என்றால் குதிரை என்று அர்த்தம். “அஸ்வினி முத்ரா” என்றால் குதிரையின் அடையாளம் அல்லது சின்னம் என்று பொதுவாய் அர்த்தம் கொள்ளலாம். ஏது குதிரைச் சின்னமும் ஆசனங்களில் இருக்குமா? என்றால், ஆம், யோகாசனங்கள், பல, ஜீவராசிகளின் தோற்றத்தையோ, குணத்தையோ, சின்னத்தையோ கொண்டிருக்கின்றன. எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகள் இருக்கிறதென்றால், எண்பத்து நான்கு லக்ஷ ஆசனங்களும் இருக்கின்றன என்று சொல்லுகிறார்கள். அதன் கருத்தென்ன? எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகள் என்றால் மனிதன், புழு, பூச்சி, நீர்வாழ்வன, பறப்பன, பட்சிஜாலங்கள், மிருக ராசிகள் எல்லாவற்றையும் சேர்த்துச் சொல்வது. நாம் அத்தனை ஜீவராசிகளைப் பற்றியும் அறிந்து கொள்ள முடியாது. அத்தனையும் சரியா வென்ற விஷயத்துக்கும் இங்கு இடமில்லை. மனிதன் எல்லா ஜீவராசிகளிலும் மேம்பட்டவன். என்றாலும் மனிதனைவிட சில சக்திகள் சில ஜீவராசிகளிடம் அதிசயிக்கும் வண்ணம் அமைந்திருக்கின்றன. அவ்வபூர்வ சக்தியை அடைய வேண்டித்தான் எண்பத்து நான்கு லக்ஷ ஜீவராசிகள் என்றால் ஆசனங்களிலும் எண்பத்து நான்கு லக்ஷம் இருக்கின்றன என்று சொல்வதாய் இருக்கலாம். உதாரணமாகப் பாம்பைப் போன்று நெளியும் சக்தியும், நிமிர்ந்து நிற்கும் சக்தியும் உண்டாக்கும் புஜங்காசனத்தைச் சர்ப்பாசனம் என்று சொல்லுவதுண்டு. சலபாசனம் வெட்டுக்கிளியைப் போல் தத்திச் செல்லும் ஒரு வேகத்தை உடலில் உண்டாக்குவதால் சலபாசனம், வெட்டுக் கிளி ஆசனம் என்கிறார்கள். தனுராசனம் தோற்றத்தில் வில்லைப்போல இருப்பதால் அதற்கு அப் பெயர் உண்டாயிற்று. ஹலாசனம் கலப்பை ஆசனம். இது கலப்பை போலத் தோற்றமளிப்பதால் அப் பெயர் வைத்தார்கள். மயூராசனம், மயில் தன் உடலை இரண்டு கால்களால் தாங்கிக் கொண்டிருப்பதைப் போன்ற தோற்றம் அளிப்பதால் அதற்கு அப் பெயர் அளித்தார்கள். எனவே, தோற்றம், குணம், முதலியவைகளைக் கொண்டு ஜீவராசிகளின் பெயரையோ பொருள் அல்லது வஸ்துவின் பெயரையோ வைத்திருக்கின்றனர்.

அஸ்வினி முத்ரா அப்படி ஒன்றும் தோற்றத்தில் குதிரையைப் போன்று தெரியாது. ஆனால் குதிரையை நன்றாய்க் கவனித்தால் அதனிடம் ஒரு அபூர்வ பழக்கம் இருப்பது தெரியும். குதிரை மலங்கழித்த பின் அதாவது சாணியைப் போட்ட பின் மலத்துவாரத்தைச் சுருங்கவும் விரியவும் செய்யும். இம்மாதிரி அது சுமார் பதினைந்து இருபது தடவைகள் கூடச் செய்யும். இம்மாதிரி நாம் சிரசாசனத்தில் செய்வதற்குத்தான் அஸ்வினி முத்ரா என்று சொல்லுவது.

செய்யும் விதம் :—சிரசாசனத்தை வேண்டிய நேரம் செய்த பின் கீழே இறங்க ஐந்து அல்லது மூன்று நிமிஷத்துக்கு முன்பு சிரசாசனம் செய்யும் விதத்தில் விவரிக்கப்பட்டிருக்கும் ஐந்தாவது சித்திரத்திலுள்ளது போல் கால்களை மடக்கி, இன்னமும் பக்கத்தில் நன்கு அகல முழங்கால்களை அகலமாய் வைத்துக் கொண்டு மலத்துவாரத்தை சுருக்கும்போது உள்ளுக்கிழுக்க வேண்டும். அப்பொழுது மூச்சைவிட வேண்டும். மலத்துவாரத்தை விரிக்கும்போது வெளியில் தள்ளுவதாகப் பாவனை செய்ய வேண்டும். மலத்துவாரம் அதிகமாய் விரிந்து சந்து ஏற்படாதபடி இருக்க வேண்டும். சிலருக்கு மூச்சைக் கணக்காய் இழுக்கவும் விடவும் செய்தால் வராது. அப்பேர்ப்பட்டவர்கள் சௌகரியப்படி மூச்சை விட்டுக் கொண்டும் இழுத்துக் கொண்டும் மலத்துவாரத்தைச் சுருக்கவும் விரியவும் செய்ய வேண்டும்.

இந்தப் பயிற்சியைச் செய்ய வேண்டுமானால் ஆசனங்கள் செய்வதற்கு முன்பே மல விசர்ஜனம் செய்துவிட வேண்டும். ஆரம்ப சாதகர்கள் முதலில் ஒரு நிமிஷம் செய்யலாம். பிறகு வாரந்தோறும் ஒரு நிமிஷம் விதம் அதிகமாக்கி வந்து அதிகமானால் ஐந்து நிமிஷங்கள் வரை செய்தால் போதும். இப் பயிற்சி செய்ய வேண்டுமானால் சிரசாசனத்தை ஆடாமல், அசையாமல், பயமின்றி, சுவரின் உதவியின்றிக் குறைந்தது ஐந்து அல்லது பத்து நிமிஷங்களாவது ஒரே தடவையில் நிற்கப் பயின்றிருக்க வேண்டும். அப்பேர்ப்பட்டவர்கள் தான் இப் பயிற்சியைச் செய்ய லாயக்கானவர்கள்.

பலன் : இப்பயிற்சி மலச் சிக்கலுக்கு ராமபாணம் போன்றது.

மூலத்துக்குச் சஞ்சீவியைப் போன்றது. நரம்புத் தளர்ச்சிக்குக் காயகற்பம் போன்றது. ஆண்மை அழிவுக்கு வரப்பிரசாதம் போன்றது.

இதற்கு முன்பு மலச் சிக்கலைப் பற்றியும் அதனை விலக்கவும் பல ஆசனங்களைப் பல அத்தியாயங்களில் சொல்லப் பட்டிருக்கின்றன. மலச் சிக்கல் பெருங் குடலில் பல இடங்களில் உண்டாகலாம். அவை எல்லாம் மற்ற ஆசனங்களால் போக்கடிக்க முடியும். ஆனால், அநேகமாய் மலச் சிக்கல் உண்டாவதெல்லாம் ரெக்டம் என்னும் பெருங் குடலின் கடைசி முடிவில் உள்ள பாகத்தில்தான். பல காரணங்களால் ரெக்டமானது தன்னிடம் வரும் மலத்தைத் தள்ளச் சக்தியிழந்து விடும். சாதாரணமாய் நாம் மலம் போவதற்கு விரும்பும் போதுதான் பெருங் குடலிலிருந்து ரெக்டத்தின் வழியாய் மலம் வரவேண்டியது. அப்படி வந்த மலத்தைப் பூராவும் ரெக்டம் வெளியில் தள்ளிவிட வேண்டியது முக்கிய கடமை. ஆனால், சிலர் அவசரத்தினாலோ அதன் முக்கியத்தை அறியாததினாலோ ரெக்டத்திடம் மலத்தைத் தங்க வைத்து விடுகின்றனர். ரெக்டம் உணர்ச்சி இழப்பதினாலும் மலம் தங்கும். ரெக்டத்திலுள்ள சுவற்றிற்கும் சத்தைக் கிரகிக்கும் சக்தியுண்டு. அது மலத்திலுள்ள விஷத்தைக் கிரகித்து ரத்தத்துடன் சேர்ப்பதினால் மற்றும் பல நோய்களுக்குக் காரணமாய் அமைந்து விடுகிறது. ஆனால், அப்படி மலத்திலுள்ள நீரை இழுத்துவிடுவதால் மலம் சிட்டங்களாகவோ அப்படியே கட்டியாகவோ கட்டி விடுகின்றது. அடுத்த தடவை



சபாவில் டிக்கட் பரிசோதகர்:—உனக்கு ஏது அப்பா டிக்கட்டு?

வந்தவர்:—ஐயாவின் டிக்கெட்டுங்க!

முதல்வர்:—ஐயா, எங்கே?

வந்தவர்:—வீட்டிலே அவர் டிக்கெட்டைத் தேடிக்கிட்டு இருக்கார்!

---

வெளிக்குப் போகும்போது முதலில் இக் கட்டி பாகம் கனத்து வெளிவர நாம் அதிகமாக முக்க வேண்டியதா யிருக்கும். அப்பொழுது மலத் துவாரத்திலோ அதற்கு உள் சிறிது தூரம் வரைக்குமோ தசைச் சுவர்கள் கட்டிய மலத்தினால் உராயப்பட்டு, காயப்படுவதும் உண்டு, எரிச்சல் இரத்தம் முதலியன உண்டாவதும் இதனால்தான். இம்மாதிரியான மலச்சிக்கலை விலக்க வேண்டுமானால் ரெக்டத்துக்குச் சக்தியை அளிக்க வேண்டும். அதைச் சிரசாசனம் செய்யும்போது அளித்தால் பூமியின் ஆகர்ஷண சக்தி ரெக்டத்தை அழுத்தாமல் விஸ்ராந்தியாய் இருக்கச் செய்கின்றது. அந்தச் சமயத்தில் அஸ்வினி முத்ராவைச் சில நிமிஷ நேரம் செய்தால் ரெக்டத்துக்குப் பயிற்சி ஏற்பட்டுச் சுறுசுறுப்படைந்து தன்னிடம் வரும் மலத்தை ஒதுக்கி வைக்காமல் சரிவர வெளியில் தள்ள முடியும். எனவே மலச் சிக்கலுக்கு இது ஒரு ராம பாணம் போன்றது.

மூலத்தைப் பற்றியும், அதனை விலக்கவும் முன் பல அத்தியாயங்களில் பல ஆசனங்கள் குறிக்கப் பட்டிருக்கின்றன. சிரசாசனம் அவைகளிற் சிறந்தது. ஆனால் சிரசாசனத்தில் அஸ்வினி முத்திரையைச் செய்வது அதைவிட மிக நல்ல உபாயமாகும். சாதாரணமாய் மூலம் ஏற்படுவதெல்லாம் ரெக்டத்தில் ஏற்படும் மலச் சிக்கலால்தான். எல்லாவற்றிற்கும் காரணம் ஒழுங்கீனமான ஆகாரம் என்று பொதுவாய்ச் சொல்லலாம். உஷ்ணமாகாத ஆகாரங்களைச் சாப்பிட்டுக் கொண்டு சிரசாசனத்தில் அஸ்வினி முத்ராவை ஒரு சில நிமிஷம் செய்வார்களானால் அதிசயிக்கத் தக்க பலனை அடைவார்கள். மூலத்தில் பலவிதம் உண்டு. ரத்த மூலமென்பது ரெக்டத்தின் சுவர்கள் புண்பட்டு அதன் மூலமோ, ஆசனவாய் அறுபட்டு அதன் மூலமோ ரத்தம் கொட்டும். அதற்கு மிக லேசான, உஷ்ணமாகாத ஆகாரங்களாய்க் காரம் முற்றும் விலக்கிச் சாப்பிட்டுக் கொண்டு சிரசாசனம் செய்தால் அவ்விடத்தில் மலம் அதிகம் உருயாமல், சிக்கல் ஏற்படாமல், சீக்கிரமாக விலகிவிடும். புண்ணும் சீக்கிரமாக ஆறும். முளை மூலமென்பது சிறுமுளை போன்ற சதைகள் ரெக்டத்திலும், மலத் துவாரத்திலும் வளர்ந்து அதில் கெட்ட ரத்தம் தங்குவதாகும். சிரசாசனத்தில் அஸ்வினி முத்திரையைச் செய்யும் போது அம் முளைகளிலுள்ள கெட்ட ரத்தம் நீக்கப்பட்டு முளைகள் சுருங்கும். வேதனையும் குறையும், இவ்வாறு மூலத்துக்கு முக்கியமான மலச்சிக்கலை விலக்கி விட்டால் மூலம் மறைய எத்தனை நாள் ஆகப் போகிறது! ஆனால் உணவைத் தக்கபடி சாப்பிட்டு வர வேண்டியது மிகவும் அவசியமானது.

நரம்புத் தளர்ச்சியும், ஆண்மை அழிவும் இரட்டைப் பிள்ளைகள் போன்றவை. இதன் காரணத்தை முன் பல ஆசன சிகிச்சையில் கூறப் பட்டிருக்கிறது. ஆனால் சிரசாசனமானது நேரடி சிகிச்சையைப் போன்றது. அஸ்வினி முத்ரா தாதுவைக் கிரகிக்கும் சக்தியை அளிப்பது. சகல நரம்புகளின் பிணைப்பும் மூளையைச் சார்ந்தது. அத்தனை நரம்புகளுக்கும் சக்தியை அளிக்கும் பொறுப்பு பிட்யூடரி கோளத்தினுடையது. எனவே, பிட்யூடரியின் ஆரோக்கியத்தைப் பொறுத்துத் தான் நரம்புகளின் சக்தி அமையும். ஆனால் பிட்யூடரி எதுவரை ஆரோக்கியமாய் இருக்கிறதோ அதுவரைதான் நரம்புகளும் வீரியம் பொருந்தியதாய் இருக்கும். அதன் ஆரோக்கியம் பலவிதத்தில் கெடலாம். உணவால், பழக்கத்தால், பரம்பரையினால் உண்டாகலாம். அப்படி உண்டான பலவீனத்தைப் போக்க நல்ல சுத்தமான ரத்தத்தைப் பிட்யூடரிக்குக் கொடுப்பதின் மூலம் தான் முடியும். சத்துள்ள ஆகாரங்களைச் சாப்பிட்டுக் கொண்டு சிரசாசனம் செய்து வந்தால் பிட்யூடரிக்கு நல்ல ரத்தம் அதிகம் கிடைப்பதுடன், அதன் நரம்பை வலுப் பெறச் செய்யும். சக்தியும் அதிகம் உண்டாகும்.

அத்துடன் அஸ்வினி முத்திரையைச் செய்யும் போது தாதுப் பைகளிலுள்ள நரம்புகள், நரம்புச் சதைகள் உன்னத பலம் பெற்று நமது இச்சைக்குத் தக்கபடி தாதுவைக் கட்டுப்படுத்தி வாழ வகை உண்டாகின்றது. இழந்த வீரியத்தைத் திரும்பப் பெற இதைவிட வேறு இல்லவே இல்லை.

யோகாசனமானது பல உன்னத படிகளை அடைய ஒரு சாதனமாகும். அவ்வுன்னத படிகளை அடைய உடல் உறுதியும், ஆண்மையும், வீர்யப் பாதுகாப்பும் வேண்டுவது மிக அவசியம். அதற்காகவே இவ்வுன்னத அஸ்வினி முத்திரையை யோகிகள் கண்டு பிடித்தனர். காமாந்தகாரத்தில் உழன்று கேடடைந்த உடலை அடைந்து விட்டவர்களுக்காக என்று அவர்கள் இதைக் கண்டு பிடிக்க வில்லை. அப்பேர்ப்பட்டவர்களுக்கும் யோக மார்க்கத்துக்கும் வெகு தூரம். ஆனால் மனம் திருந்தி இனி அவ்வழிக்குப் போகாமல் உத்தம இல்லற வாழ்க்கையை மட்டும் கைக் கொள்ளச் சித்தமாய் இருப்பவர்கள் யாவரும் இவைகளைக் கைக் கொள்ளலாம். கடைத்தேறலாம். ஆனால் பழையபடியே வேதாளம் முருங்கை மரம் ஏறிக் கொண்ட கதையாய் முடியக் கூடாது. அதற்கான திட மனத்தையும் ஆசனம் அளிக்கும். ஆகையால் நரம்புத் தளர்ச்சியுற்று, ஆண்மை இழந்து வாடும் வாலிப நண்பர்களுக்கு இது ஒரு அரிய சந்தர்ப்பமாகும்.

ஆகையால் நண்பர்களே! உங்களுக்காக இல்லாவிட்டாலும் நமது நாட்டின் நன்மையை உத்தேசித்தாவது நீங்கள் ஒவ்வொருவரும் நோயற்று வாழ பாடு படுங்கள். அதற்கு ஆசனமே சிறந்த வழி!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Gardeu, Poonamallee High Road, Kilpauk, Madras



பற்களை
சுத்தம் செய்வது
பாதி வேலை
தான் . . .
தினமும் ஈறுகளைப்
பாதுகாப்பது அந்த
வேலையை
பூர்த்திசெய்கிறது!
உங்கள் பற்கள் எவ்வளவு ஒழுங்கானவையாக இருந்தாலும் ஈறுகள் கெட்டுப் போனால் அவை உபயோகமற்றதாகி விடுகின்றன. தினமும் இருமுறை கிப்ஸ் எஸ். ஆர். உபயோகியுங்கள். ஈறுகளை ஆரோக்கியமாக வைத்திருக்கும் ஸோடியம் ரிஸினோலியேட் இதில் அடங்கியுள்ளது. மேலும் எஸ். ஆர். டூத்பேஸ்ட் பற்களை பளிச்சென்று வெண்மையாக சுத்தம் செய்கிறது.
கிப்ஸ்
எஸ்.ஆர். டூத்பேஸ்ட்
பற்களை பளிச்சென்று வெண்மையாகவும் ஈறுகளை ஆரோக்கியமாகவும் வைத்திருப்பதற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டுள்ளது
S.R.
GSR. 88-50 TM

REGD. No. M 4392

*Registered as a newspaper in Ceylon*